உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

கயிலைமாமுனிவர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித்
தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய இலக்கியத் திங்கள் இதழ்



அட்டையில்:
திருச்செந்தூர் ஸ்ரீ செந்திலாண்டவர்
திருவுருவம்

'ஸ்ரீ குமரகுருபரர்'

தொகுதி 5 கார்த்திகை பகுதி 2

# வளர்ச்சிக்கு உதவுங்கள்

ஸ்ரீ குமரகுருபரர் என்னும் இச் சமய இலக்கியத் திங்கள் இதழ் நான்காண்டுகள் நிறைவுற்று ஐந்தாம் ஆண்டில் வெற்றிநடை போடுகிறது. ஸ்ரீகுமரகுருபரர் இதழ் பெரும் பேராசிரியர்களின் சித்தாந்த சாஸ்திரக் கட்டுரைகளையும் சமய இலக்கிய விளக்கக் கட்டுரைகளையும் தாங்கி தொகுத்துவைக்கவேண்டிய செல்வமாக வருவதை நல்லன்பர்கள் பலர் பாராட்டி வருகிறார்கள். பல்லாயிரக் கணக்கில் சந்தாதாரர்கள் சேர்ந்தால் பக்கங்களை அதிகமாக்கவும் மேலும்பல புது அம்சங்களைச் சேர்க்கவும் இன்ன பிற ஆக்கபூர்வமான வளர்ச்சிக்கும் உதவியாகஇருக்கும். சமய நல்லுள்ளம் படைத்த அன்பர்கள் தாம் ஆயுட் சந்தாதாரர்களாகியும், உறவினர்களையும் நண்பர்களையும் சந்தாதாரர்களாக்கியும் நிறுவனங்களிலிருந்து விளம்பரங்கள் சேகரித்தனுப்பியும் செய்யும் செயல்கள்பேருதவியாக இருக்கும்.

முகவர்கள் வழியாக விற்பனை செய்யப் பெறும் இதழ்களுக்குச் சில நன்மைகள் உண்டு. இந்த இதழ் நேரடிச் சந்தாதாரர்களை மட்டும் நம்பி வளரும் இதழ் ஆகையினால் சந்தாதாரர்கள் அணி உணர்வுடன் இவ்விதழ் வளர்ச்சிக்கு உதவ வேண்டுகிறேன். கடந்த ஐந்தாண்டுகளில் காகித விலை ஏற்றம் அச்சுக்கூலி உயர்வுகள் முதலிய இடர்ப்பாடுகளால் எல்லா இதழ்களின் சந்தாக்கள் விளம்பரக் கட்டண விகிதங்கள் மாற்றப் பெற்றன. ஆனால் ஸ்ரீ குமரகுருபரர் இதழின் சந்தா, ஆயுட்சந்தா, விளம்பரக்கட்டண விகிதங்கள் ஆகியன மாற்றப் பெறவே இல்லை. சந்தாக்கள் அதிகரிப்பதே இந்நிலை தொடரத் துணை யாகும். சந்தா விவரங்கள் 56ஆம் பக்கத்திலும், சந்தாவைப் புதுப்பித்துக் கொள்வது பற்றிய விண்ணப்பம் 64ஆம் பக்கத்திலும் வெளியிடப் பெற்றுள்ளன.

***

பண்டார மும்மணிக் கோவையின் இருபத்தொன்றும் பாடல் ஒரு வெண்பாப் பாடல். அப் பாடலை ஸ்ரீ குமரகுருபர சுவாமி

கள் அவர்களும், குருநாதராகிய ஸ்ரீ மாசிலாமணி தேசிக சுவாமி கள் அவர்களும் உரையாடுவது போல் கயிலைமாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் விளக்கியருளியுள்ளார் கள். அப்பாடலை ஓர் அருள் ஞான அநுபவப் பாடலாக அடையாளம் காட்டியருளியுள்ளார்கள்.

மரணம் சோகமானது யம வாதனை கொடுமையானது. சில ருக்கு அச்சோகமும் கொடுமை யும் இல்லை. அது யாருக்கு எப்படி என்று இலக்கியச் சோலை பகுதி யில் வாகீச கலாநிதி திரு. கி. வா. ஜ. அவர்கள் தெளிவாக்கியுள் ளார்கள்.

பேரறிஞர் திரு மு. அருணாசலம் அவர்கள் சித்தாந்த சாஸ்திரங் கள் என்னும் தொடர்க் கட்டுரை யுள் திருவுந்தியாரின் உரைகள் பற்றிப் பெரும்பாலானவர்கள் அறியாத அரிய செய்திகள் பல வற்றை எழுதியுள்ளார்கள்.

அறிஞர் திரு. கோ. வன்மீக நாதன் அவர்கள் வயிரவனும் சிராளனும் என்ற தலைப்பில் பெரிய புராணப்பாக்கள் சிலவற் றிற்குப் புதிய நயப்பொருள்கள் கண்டு எழுதியுள்ளார்கள்.

புலவர் திரு. முருகு. சுவாமி நாதன் அவர்களின் பட்டினத் தார் பாடல் விளக்கமாகிய எய்ப் பினில் உதவும் மெய்ப்பொருள் என்ற கட்டுரையும் இவ்விதழில் பிரசுரமாகியுள்ளது.

மற்றும் திரு. கோ. வன்மீக நாதன் அவர்கள் தொகுத்த வலியன பத்து, டாக்டர் திரு. சடையப்பன் அவர்களின் இதமான வாழ்வுக்கு எளிய வழிகள், பேராசிரியா திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள் எழுதி வரும் சிவப்பிரகாசம் விளக்க வுரை, மற்றும் களந்தைக் கலித் துறை அந்தாதி, திருவிளையாடற் புராணம் உரைநடை முதலிய பகுதிகளும் இந்த இதழுக்கு அணி செய்கின்றன.

நி. ஆ-ர்;

---

# கவனத்திற்கு ஒரு குறிப்பு

இதழ்த் தொடர்பான கடிதங்கள் சந்தாக்கள், விளம்பரக் கட்டணங்களுக்கான டிராப்டுகள், M. O. க்கள் யாவும் ஆசிரியரின் பெயருக்கு அனுப்பாமல் ஆசிரியர், ஸ்ரீ குமரகுருபரர். ஸ்ரீ காசிமடம் திருப்பனந்தாள் 612 504 என்ற முகவரிக்கே அனுப்ப வேண்டுகிறேன்.

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொரன்றைக் கண்ணி யவர்.



# அருள் பழுத்த கனிச் சுவை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21-ஆவது அதிபர்

**கயிலைமாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

கடவுளுக்கு எந்தவூர் செந்தவூர் என்று கேட்டால் எந்தவூரைச் சொல்லுவது என்று நமக்குக் குழப்பம் வந்து விடும். எங்கும் நிறைந்த பரம்பொருளுக்கு எப்படி ஓர் ஊர் சொந்தவூராக முடியும்? சர்வ வியாபியை எப்படி ஓர் ஊர்க்காரனுக அடைக்க முடியும்? அவன் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள தலங்களைப்பட்டியல் போட்டுச் சொல்லலாம். இன்னும் சுருக்க வேண்டுமானுல் பாடல் பெற்ற திருத்தலங்களை வரிசைப்படுத்தி எண்ணி உரைக் கலாம் எந்த விதத்திலும் ஓர் ஊர்க்காரனுக அவனை அடக் கவே முடியாது!

கடவுளின் சரியான பெயர் என்ன என்று கோட்டால் நமக்குக் குழப்பம் மட்டுமல்ல; கோபமே வந்துவிடும், உலகத்தவர்கள் தன் செல்லக்குழந்தைகளுக்கு எத்தனை

பெயர்கள் வைக்கிறுர்கள்! நாமகர்ணத்தில் வைத்த பெயர் ஒன்று; அப்பா வைக்கும் பெயர்; அம்மா அழைக்கும் பெயர்; உறவினர்கள் சொல்லும் பெயர் இப்படிப் பெருகிக் கொண்டே போகிறது. அவனவன் செயல்களினுல் ஏற்படும் பெயர்கள்; தொழிலினுல் வரும் பெயர்கள். ஆக ஒருபெய ரோடு வாழ்வு கொள்ளும் மனிதனே கிடையாது என்ற நிலை இருக்குமானுல் சர்வேசனுக்கு எத்தனைப் பெயர்கள் இருக்க வேண்டும்? அவன் பெயர் என்ன என்ருல் ஒரு பெயராக எப்படிச் சொல்லமுடியும்? வேண்டுமானுல் பல்லாயிரம் திருநாமங்கள் கொண்ட பரம்பொருளைப் போற்றி சொல்வதற்காக முன்னேர்கள் தொகுத்த ஓரா யிரம் திருநாமங்களைச் சொல்லலாம். அல்லது அதனினும் சுருக்கிய நூறு திருநாமங்களைச் சொல்லலாம். அதைவிடக் குறைப்பது எப்படி? பரம்பொருள் என்ருலும் ஈஸ்வரன் என்ருலும் சிவம் என்ருலும் அது அவனின் முழுமையையும் சுட்டாதே! ஏகதேசமாக அல்லவா அமைந்து விடும்?

ஒருநாமம் ஒருருவம் ஒன்றும் இலார்க்கு ஆயிரம் திரு நாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ'' என்ற மாணிவாசகத்தைச் சிந்திக்கும் போது அவனுக்கு ஒரு பெயருமே இல்லை; ஆயிரம் திருநாமங்கள் சொல்லுவது நம் விருப்பத்தின் விளைவே என்றல்லவா ஆகிறது.

எவ்வகையில் பார்த்தாலும் ஒருண்மை நமக்குப் புலப் படுகிறது. கடவுளின் ஊர்கள் எவை என்று கேட்காமல் கடவுளின் ஊர் எது என்று கேட்டால் விடை சொல்ல முடியாது. அதுபோலக் கடவுளின் திருநாமங்கள் யாவை என்று கேட்காமல் கடவுளின் திருநாமம் எது என்று கேட்டாலும் விடைசொல்ல முடியாது.

கடவுளின் ஊர், பேர் பற்றி ஸ்ரீ குமரகுருபர சுவாமி களுக்கும், குருதேவராகிய ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் அவர் கட்கும் சுவையான உரையாடல் நிகழ்ந்தது.

ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் : கடவுளின் ஊர் எது?

ஸ்ரீ குமரகுருபரர் : கடவுளின் ஊர் திருவாரூர்.

ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் : அப்படிச் சொல்வது பொய். மீண்டும் நன்ருகச் சிந்தித்துக் கடவுளின் ஊர் எது என்று சொல்.

ஸ்ரீ குமரகுருபரர் : குருதேவரே! நன்ருகச் சிந்தித்துத்தான் சொல்கிறேன். பரமன் உலகம் உய்ந்து ஈடேறும் பொருட்டு மானுடச் சட்டை தாங்கி வந்தது கமலை என்னும் திருவாரூரிலேயல்லவா? எனவே கடவுளின் ஊர் திருவாரூர்தான்

ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் : உண்மை. நீ சொல்வது முற்றிலும் உண்மை. அது சரி. கடவுளின் பேர் என்ன?

ஸ்ரீ குமரகுருபரர் : ஸ்ரீ மாசிலாமணி!

ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் : எதிரில் அமர்ந்திருப்பவர் பெயர் என்ன என்று கேட்டேன். கடவுளின் பெயர் என்ன என்றல்லவா கேட்டேன். நன்ருகச் சிந்தித்துச் சொல்.

ஸ்ரீ குமரகுருபரர் : தேவரீர் அருள் ஒளி வெள்ளத்தில் திளைக்கும் நிலையில் எளியேன் மேலும் சிந்திக்க ஒன்றுமில்லை. ஓர் ஊர் ஒரு பேர் இல்லாத சர்வேஸ்வரனே உலகம் ஈடேறும் பொருட்டுக் கமலையுள் ஞானப் பிரகாசனுக எழுந்தருளினுன். அவனே அதே நோக்கத்துடன் ஸ்ரீ குரு ஞான சம்பந்தனுக அருள் பாலித்தான். ஒரு விளக்கின் ஜோதியிலிருந்து எத்தனை விளக்குகள் ஏற்றினுலும் ஒளி வேறு வேறு ஆகாது என்று தேவரீர் எளியேனுக்கு உணர்த்தியருளியுள்ளீர்கள். அவ்வண்ணம் ஸ்ரீ ஞானப்பிரகாசனுகவும் ஸ்ரீ குரு ஞானசம்பந்தனுகவும் வந்த அதே கடவுள் ஸ்ரீ மாசிலாமணியாக-எளியேனின் குருநாதனுக வந்தென் எதிரில்

எளியேன் தெரிசிக்கக் காட்சி கொடுப்பதை நன்கு உணர்கிறேன். எனவே கடவுளின் திருநாமம் மாசிலாமணி என்பதுதான்!

*ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் :* மெய்.

*ஸ்ரீ குமரகுருபரர் :* தேவரீர், திருமுன்னிலைக்கு எளியேன் ஒரு வினு வைக்கிறேன். உயிரைப் பற்றியும் உலகைப் பற்றியும் இறையைப் பற்றியுமான உண்மைகளைச் சாஸ்திரங்கள் சொல்கின்றன. சரீரத்தை அநித்யம் என்று முடிக்கின்றன. அதைப் பற்றி மன்பதைகள் உய்யுமாறு உரைத்தருள வேண்டும்.

*ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் :* சரீரங்களுக்கு 'மெய்' என்று பெயர். அது மங்கல வழக்காகக் கூறப்பட்டது. ஆனுல் பால் வைத்திருக்கும் பாத்திரத்தைக் காட்டி இது என்ன என்று கேட்டால் இது பால் என்றுதான் சொல்வார்கள். உள்ளே வியாபித் திருப்பதன் மகிமை புறத்தும் வருகிறது. ஆத்மா சாதகனுக்கும் பட்சத்தில் சரீரமும் மெய் என்ற ஏகதேச மகத்துவம் பெறுகிறது.

இப்படிச் சொன்ன மாசிலாமணி தேசிகர் மீண்டும் 'என்ன இருந்தாலும் சரீரம் பொய்யானதுதான் அநித்திய மானதுதான்' என்று முடித்தார். கீழ்வரும் பண்டாரமும் மணிக்கோவையின் 21ஆம் பாடலைப் பாருங்கள். அதற்கு இவ்வண்ணம் பொருள் கொள்வது ஒன்று. இனி மற்றவாறு பொருள் காண்பதையும் பின்னே தருவோம் :-

ஆருரே ஊர்;பேர் அருள்மாசி லாமணிஎன்று
ஓர்ஊர்பேர் இலாற்கு உரைத்தேற்குப்—பார்ஏறப்
பொய்என்ருன்; மெய்என்ருன்; பொய்யான பொய்யுடலை
மெய்என்ருன்; பொய்என்ருன் மீண்டு.

என்பது அப்பாடல்.

ஊரெனப்படுவது உறையூர் என்ற வழக்கை மாற்றி அருள் ராஜதானியாக விளங்கும் கமலையே ஊர் என்றும், பேர் எனப்படுவது மாசிலாமணி என்பதே என்றும், ஓர் ஊரும் பேரும் அற்றவனுகிய குருநாதரின் திருமுன் உரைத்தேன். எனக்கு அவன் கீழ்வருமாறு உபதேசித்தான்: உலகம் முழுவதும் பொய் என்றும், இவ்வாறு நான் சொல்வதே மெய் என்றும், அநித்யத்திலும் அநிதயமான சரீரத்துக்கு மெய் என்பது பெயர் என்றும், ஆனல் அது பொய்யே என்றும் குருநாதன் உபதேசித்தான் என்பது இப்பாடலின் கருத்து.

—பார் ஏறப்

பொய்என்ருன் மெய்என்ருன்

என்ற தொடருக்கு வேருேர் உரையும் கூறுவதுண்டு. உலகம் நடுநிலையில் இல்லாமல் மாற்றம் அடைவது. எனவே அது காரியத்தில் பொய். ஆனல் காரணத்தில் மெய்யானது.

பொய்யான பொய்யுடலை
மெய்என்ருன் பொய்என்ருன் மீண்டு

என்ற தொடருக்கும் அவ்வகையிலேயே உரை சொல்லலாம். எதிர்மறை இலக்கணையால் மெய் என்று அழைக்கப்பெறும் சரீரம், உலகம் போலவே ஒரு நிலையில்லாமல் மாற்றம் அடைவதனுல் பொய்யே ஆகும்.

முதலில் உரையாடல் வகையில் விளக்கிய உரை தவிர எஞ்சிய உரைகளில் 'பார்ஏற' என்பதில் உள்ள ஏற என்பதற்கு முழுதும் என்று பொருள்கொள்ள வேண்டியுள்ளது.

எவ்வகையில் உரை கொண்டாலும் குருநாதராகிய ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் அவர்களிடம் தாம் பெற்ற அருள் ஞான அனுபவத்தைக் குறிப்பிடும் பாடலாக இது அமைகிறது.

*—சிவசிவ*

உ

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிய
திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பா
L. P. இசைத்தட்டுக்கள் (E. C. S. D. 35503)
கயிலைமாமுனிவர்
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள்
அருளாணையின் வண்ணம்
தி கிராமபோன் ஆப் இந்தியா-வினரால்
வெளியிடப் பெற்றவை.
பாடியவர் : டாக்டர் சேலம் ஜெயலட்சுமி.

திருக்கோவில்கள், திருமுறை விழாக்கள், பொதுக்கூட்டங்கள் தெய்விக நிகழ்ச்சிகள் ஆகியவைகளில் கந்தன் அருள் கவிதை ஒலியைப் பரப்பி அருள் நலம்பெறுக! விபரங்களுக்கு,

மேலாளர்,
ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் - 612 504.

---

# ஸ்ரீ குமரகுருபரர்
## சமய இலக்கியத் திங்கள் இதழ்
### சந்தா விபரம்

| | | | |
|---|---|---|---|
| ஆயுள் சந்தா | (உள்நாடு) | ரூ. | 100-00 |
| ,, | (வெளிநாடு | ரூ. | 125-00 |
| ஆண்டு சந்தா | (உள்நாடு) | ரூ | 7-50 |
| ,, | (ஸ்ரீலங்கா) | ரூ. | 10-00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 12-00 |

### விளம்பரக் கட்டண விகிதங்கள்

| | | |
|---|---|---|
| அட்டை பின் பக்கம் 2 வண்ணங்கள் | ரூ. | 150-00 |
| முன் அட்டை உள்பக்கம் | ரூ. | 125-00 |
| பின் அட்டை உள் பக்கம் | ரூ. | 100-00 |
| உள் முழுப்பக்கம் | ரூ. | 60-00 |
| அரைப்பக்கம் | ரூ. | 30-00 |



# களந்தைக் கலித்துறை அந்தாதி



நின்றன வெல்லாம் நிலாதன வெண்ணி நெடுநெஞ்சமே
மன்றலஞ் சோலை புடைசூழ் களந்தைநன் மாநகரிற்
கொன்றையந் தாரணி தத்தைலிங் கேசர்மெய்க் கோயிலினுள்
ஒன்றிய நற்பணி செய்தாற் பிறவி ஒழிந்திடுமே. (22)

இடும்பலிப் பாத்திர மேந்திய கையின் ராசியென்னுங்
குடும்ப நிறைந்திடு செல்வர்க ளாகிலென் கொந்தலர்பூங்
கடம்பணி கந்தன் வரிபடு செல்வக் களந்தையிலே
அடம்பணி தத்தைலிங் கேசரைப் போற்று வறிவிலரே. (23)

அறிவுக் கறிவி லளவு படாதவ னண்டமெல்லாஞ்
செறிவுற் றிடுபொரு ளாகிநின் றோனந் திருக்களந்தை
மறியுற்ற செங்கையர் தத்தைலிங் கேசர் மனத்தினிலென்
பிறிவுற் றிடாதநல் லானந்தத் தேனைப் பெருக்கினனே. (24)

பெருக்கிடு வீர்களந் தாபுரித் தத்தைப் பிரானடிக்கே
உருக்கிடும் அன்பை அவனடி யார்நடு வுள்ளணைந்து
செருக்குறு வீரவன் தாளடை யாதவர் தீநட்பினை
நெருக்கிடு வீரருள் தந்திடு வான்நல் நிலத்தவரே. (25)

நிலத்தலை எல்லாம் ஒருகுகைக் கிழே நிழற்றிமிக
நலத்தலைத் துய்க்கு மரசுக ளாவதில் நன்களந்தைத்
தலத்தலை நஞ்சயில் தத்தைலிங் கேசர்பொற் றாளவர்க்குக்
கலத்தலைத் தொண்டுசெய் தூண்பலி கொள்ளல் களிப்புடைத்தே. (26)

களிக்கின் றிலையவன் கோலத்தைக் கண்டு கசிந்துகண்ணீர்
துளிக்கின் றிலைமெய் குதுகுதுக் கின்றிலை தூயநறை
தெளிக்கின்ற சோலைக் களந்தைச் சுகலிங்க தேவனடி
ஒளிக்கின்ற தெவ்வண்ணம் நெஞ்சே பிறவி யொழிந்திடவே. (27)

இடங்கரின் வாய்நின்று பிள்ளையைத் தந்தவர்க் கெய்ப்பில்வருந்
தடங்கொண்ட பூம்பொழிற் சூழ்களந் தாபுரித் தத்தைலிங்கர்
நடங்கொள் திருவடிக் காம்பணி செய்ய நலமடைந்தேன்
அடம்விடு வல்வினை யேவுற வென்றுமொட் டாதுனக்கே. 28

உனக்கே பரமென் றுநிபெற் றேனை யுறுபிணிகள்
தனக்கே இரையென வைத்தனன் றேவயல் சார்களந்தை
சினக்கேழல் வெண்கோ டணிசுக நாதர் திருந்தடியார்
மனக்கேவலந்தீர்ந் திடுமது பொய்போ மறைமுதலே. 29

மறைமுத லேகொம் பிலாக்கொடி போல வருந்திநினை
இறையவ னேயடைந் தேன்நமன் தூதர் எனைத்தொடர்முன்
பிறையணி மாடக் களந்தைச் சுகலிங்கப் பிஞ்ஞகனே
அறைதரு பொற்கழ லாய்விடை ஏறிவந் தாண்டுகொள்ளே. 30

கொள்ளேன் பரசம யத்தவர் நெஞ்சம் குறிப்பினிலும்
உள்ளேன் அவர்தெய்வம் உன்னடிப் போதினை உள்ளுவரை
விள்ளேன் களந்தைச் சுகலிங்க தேவ வினைவெயிலின்
நள்ளே தவிக்கு மெனக்கரு ளாதது ஞாயமன்றே. 31

ஞாயமன் றேபுறம் போக விடுப்பது நல்லடியார்
மேய குழுவில் ஒருவனல் லேனில மெய்ச்சமயத்
தேயவ னென்றருள் செய்தெனை யாள்வாய் எழிற்களந்தை
தூய சவுந்தர வல்லிதன் பாகச் சுகலிங்கனே. 32

சுகலிங்க வல்வினைப் பவ்வத் தழுந்திச் சுழலுமெற்கு
புகலிங்க நல்லடி யாரையுங் காட்டிநின் பொன்னடிக்காம்
அகலின் புறுபணி செய்யவைத் தாய்தென் அமர்களந்தை
இகலம் பகநற் சவுந்தர வல்லி இறையவனே. 33

இறையவ னென்றுஞ் சிவசங் கரவென்றும் ஈசனென்றும்
பிறையணி செஞ்சடைப் பிஞ்ஞக னென்றும் பெருமவென்றும்
நறைமலர் சோலைக் களந்தைச் சுகலிங்க நாதவென்றும்
அறைதரு வார்களன் றேசிவ லோக மடைபவரே. 34

பவனன் புவிநீ ரரியோடா காயம் பரந்தஅண்டத்
தெவனந் தருநவ பேதமுங் காட்டி இருந்திடுவோன்
அவனங் களந்தைச் சுகலிங்க தேவன் அடியவர்கருச்
சிவனன் குறுமுத்தி விட்டின் கதவு திறப்பவனே. 35

திறப்பக் கபாலம் உயிர்விடும் யோகச் செறிவுறிலெனி
அறப்பக் குவர்க ளெனிலென் சருகயின் றேபலனென்
சிறப்பக் கதலி கமுகுப லாவனஞ் சேர்களந்தை
நிறப்பொற் கடுக்கைச் சுகலிங்சர் தாளை நினைக்கிலர்க்கே. 36

நினைக்கி லளவு படாதவன் முப்புரம் நீறெழமுன்
தனைக்குஞ் சிரிப்பி லெரித்ததின் மூவரைத் தானளித்தோன்
நனைக்கும் பொழிற் றென்களந்தா புரித்தத்தை நாயகனுர்
எனைக்கற் பனையி லடையாத தொண்டி லிருத்தினனே. 37

இருத்தினன் தன்னடி யார்நடு வென்னை இருத்திமனந்
திருத்தினன் நற்றுரி யாதீத மாம்வெளி சேர்நடன
மருத்தினைக் காட்டிமெய் மாலெனுமாசை வலைப்பிணித்தான்
கருத்தன் களந்தைச் சுகலிங்க வல்லபங் கண்டிலனே. 38

கண்டுறு சொல்லியர் ஆசைக் கடலிற் கவலையுற்று
விண்டுறு வேனைநின் மெய்யருள் தன்ஞல் விடாதளிப்பாய்
தெண்டிரைப் பாலி நதிவட பாலிற் செறிகளந்தைப்
பண்டமர் தத்தைலிங் கேச வழகம்மை பங்கினனே. 39

பங்கயன் மால்முடி தாண்மலர் காணுப் பரன்களந்தை
மங்கை சவுந்தர வல்லி கொழுனன் கருவலரூர்
சிங்கமுன் மூரலி ஞலெரித் தோன்சுக தேவனெனைத்
தங்கழல் பாடும் பணிபுரிந் தல்லலைச் சாடினனே. 40

சாடினை வீரனில் தக்கன்றன் வேள்வியைத் தண்களந்தை
நீடினை தத்தைலிங் கேசவென் ஞணவ நீள்கிழங்கை
விடினை யும்படிச் செய்தடி யார்கள்தம் மெய்க்குழுவிற்
கூடினை யாதவன் பென்றுகொல் நீதரக் கொள்வதுவே. 41

கொள்ளுவ நின்சம யத்தவர் வார்த்தை குறிப்பின்மனத்(து)
உள்ளுவ பஞ்சாக் கரத்தினை வெண்ணி றுடற்கனிய
அள்ளுவ தெங்கு மணிவது சாதன மாந்தொழிலே
புள்ளுறு சோலைக் களந்தைச் சுகலிங்க போற்றுவதே. 45

போற்றிட மாமகங் காசி வயிரவர் போதவன்று
சாற்றிடு மத்தின மாகக் களந்தையிற் றத்தையப்பார்
தேற்றிட விச்சுக தீர்த்தத்துக் கங்கை சிறந்துபொங்க
ஆற்றிடக் காரி படிந்து தெரிசித் தமர்ந்தனனே. 43

அமரர் முதுவ னகந்தையி னுற்கினி யாகிநொந்து
தமரர் மிருநற் றடஞ்சூழ் களந்தையிற் சங்கரனைக்
குமர சவுந்தர வல்லியைப் போற்றிக் குறைகள்தவிர்ந்(து)
எமரன் புறுசுக லிங்கரென் றேபெய ரிட்டனனே. 44

இட்டிடை நின்புய ஆசை வலைப்பட இக்குவிலோன்
மட்டுடை வாளி நுழைக்க மயங்கிடு மாதுபழி
சிட்டுநல் நன்றல கொன்றையந் தாரவட் கேகொடுப்பாய்
சிட்டர்கள் போற்றுங் களந்தைச் சுகலிங்க திவ்வியனே. 45

திவ்விய பாலி நதிவட தீரத்துச் சேர்களந்தை
நவ்வியங் கைச்சுக லிங்கன் சவுந்தர நாயகியோ(டு)
அவ்விய மில்லா தவர்க்கரு ளும்படி யாங்கிருந்தார்
எவ்விய நற்பணி செய்துநெஞ் சேகதி யேறுவையே. 46

ஏறினை யன்பர் உளச்செய்யில் ஞான மெனுமுதிர்ந்த
நாறினை யூன்றி யருட்புனல் பாய்ச்சிமின் னுர்களெனுந்
தாறினை விட்டித் திவமுதிர் சாலிசெய்வெய [தாள்ளை
நீறினை தென்களந் தைச்சுக லிங்க நிராமயனே. 47

நிராமயன் செங்கனல் மேனியன் சோலை நிறைகளந்தை
ஆராவணி தத்தைலிங் கேச ரழகம்மை யாமமுதை
விராவவென் கண்கொண்டு நோக்கிப்பிறவி விடாயகன்று
பராவமு னைத்தவம் பண்ணினை வேலைசூழ் பாரிடத்தே. 48

பாரிடஞ் சூனியம் பம்பை பசாசு படிற்றுநடை
ஆரிட மேமுதல் நீக்கிமெய் வாழ்வை யளிக்குநல்லோர்
சாரிட யாங்களந் தைச்சுக லிங்கர் சவுந்தரியார்
நேரிடச் சன்னதி கண்டு பணியு நிலையையர்க்கே. 46

நிலவணி நீள்முடி யண்டத்தின் மேலு நிமிரஅடி
குலவுறு பாதல மேழுங் கடக்கக் குடங்கையன்று
கலவுறத் திக்கிலுஞ் சர்வசங் காரச் சுட லையிலே
புலவர் களந்தைச் சுகலிங்கர் செய்நடம் போற்றுமதே. 50

போற்றுவ துன்னைப் புனைவதுன் தாளிற் புதுமலர்கள்
ஆற்றுவ துன்பணி பாடுவ துன்புகழ் ஆகமெலாந்
தேற்றுவ துன்றிரு நீற்றினை வேறினை செய்தொழிலியாஞ்
சாற்றுங் களந்தைச் சுகலிங்க வெல்செயத் தக்கதுவே. 51



# வயிரவரும் சீராளனும்



## கோ. வன்மீகநாதன்

''வாழ்வாங்கு வாழ்பவன் தெய்வத்துள் வைக்கப்படும்'' என்பது திருவள்ளுவரின் வாக்கு. மனிதனின் இம்மை மறுமை வாழ்வுக்கும் வழிகாட்டி வீடு அளிப்பது திருக்குறள். அதன் அறத்துப் பாலின் இறுதிப் பதிகம் 'அவா அறுத்தல்'. அதன் இறுதிக் குறள்,

ஆரா இயற்கை அவாநீப்பின்
அந்நிலையே
பேரா இயற்கை தரும் (370)

என்பது.

இக்குறளைத் துணையாகக் கொண்டு நாயன்மார்கள் சிலரின் வாழ்க்கையை ஆராய்வது பயன் தரும். மனக் குழப்பத்தை நீக்கி இறைவனது அருட்செயல்களைப் புரிந்து கொள்ளப் பயன்படும். சிறப்பாக, சிறுத்தொண்ட நாயனாரின் வாழ்க்கையில் நிகழ்ந்த தலையாய சம்பவத்தை விளக்க இக்குறள் உதவும். சிறுத்தொண்டருடைய பண்பைச் சேக்கிழார் பெருமான் வாக்குகளைக் கொண்டு பார்ப்போம்.

உள்ளநிறை கலைத்துறைகள் ஒழிவின்றிப்
பயின்றவற்றால்
தெள்ளிவடித் தறிந்தபொருள் சிவன்
கழலிற் செறிவென்றே
கொள்ளும் உணர் வினில்முன்னே
கூற்றுதைத்த கழற்கன்பு
பள்ளமடை யாய்என்றும் பயின்றுவரும்
பண்புடையார்- (4)

கற்க கசடற கற்பவை; கற்றபின்
நிற்க அதற்குத் தக

என்ற குறளின் படியும்,

கற்றதனால் ஆய பயன் என்கொல்
வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்.

என்ற குறளின் படியும் சிறுத்தொண்டர் வாழ்ந்தார்.

இவருக்குச் சகல சம்பத்துகளுமிருந்தும் ஒரு குறையிருந்தது அது பிள்ளையில்லாக்குறை. அது ''நீராருஞ் சடைமுடியார் அருளினால்'' நீக்கப்பட்டது. ''திருவெண்காட்டு நங்கைபால், சீராளதேவர் எனுந் திருமைந்தர் அவதரித்தார்''. நெடுங்காலங்கடந்து பிறந்த பிள்ளை. ஒரே பிள்ளை. ''அருமையினிற் றனிப் புதல்வர் பிறந்த

பொழுது" என்கிறார் சேக்கிழார் பெருமான் மற்ற சொற்றொடர்களை சிலவற்றைப் பார்ப்போம்.

''அலங்கரித்த பெருமையினிற் கிளை
களிப்ப''
பெறற்கரிய மணிபெற்று வருமகிழ்ச்சி
நாதையர் மனத் தடங்கா வகை...''

இத்தகைய சொற்றொடர்களின் கருத்தைக் கொண்ட பாடல்கள் மேல்வரக் காண்கிறோம். (பாடல்கள் 18-22)

ஒளிபுகாக் கானகங்களில் தாவர வகைளில் ஒருவகைக் கொடியிருக்கிறது. அது ஒருமரத் தடியில் வளர்ந்துமரத்தைச் சுற்றி வளைத்து வளைத்து இறுகப்பற்றி நாளடைவில் திருதராட்டிரனின் தழுவல்போலமரத்தை மாய்த்து விடும். மேலே குறிப்பிடப்பட்ட ஐந்து பாடல்களில் நம் மனத்தில் சேக்கிழார் எழுப்ப விரும்பும் கருத்து யாதெனின் சீராளன் அத்தகைய கொடிபோல் சிறுத் தொண்டரின் உள்ளத்தைச் சுற்றி வளைத்துப் பற்றிக் கொண்டான் என்பதே;

''பற்றுக பற்றற்றான் பற்றை;
அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.''

என்றார் திருவள்ளுவர்; இக் குறளில் வரும் ''அப்பற்று'' என்ற சொல் இறைவனைச் சுட்டும். சிறுத்தொண்டர் 'புத்' என்ற நகரத்தில் புகாமலிருக்கப் பிறந்த சீராளனின் மீது சிறுத் தொண்டருக்கு விளைந்து வளர்ந்த பற்றால் அவர் அந்நரகத்திலேயே வீழ்த்தப் பட்டுவிடுவாரே என்ற கருணை நிறைந்த எண்ணம் இறைவன் திருவுள்ளத்தில்தோன்றிற்று என்ற குறிப்பில் சேக்கிழார் பெருமான் அடுத்த பாட்டை ''இத் தன்மை நிகழு நாளில்'' எனறு தொடங்குகிறார். ''எத்தன்மை?'' என்ற கேள்வி நம் மனத்தில் எழுகின்றது. சேக்கிழார் பெருமான் மேலே குறிப்பிட்ட 18 முதல் 22 முடிய உள்ள பாடல்களில் அவ்விடை தெளிவாகக் காணப் படுகிறது.

உடனே விடையவர் சிறுத் தொண்டருடைய ''மெய்த் தன்மை அன்புநுகர்ந் தருளுதற்கு..., தாம் சித்தமகிழ் வயிர வராய்த் திருமலை நின்று அணைகிறார்''.

எந்தச் சூழ்நிலையில் வந்தார்? ''இத்தன்மை நிகழுநாளில்''. ஏன் வந்தார்? மெய்த்தன்மை அன்பு நுகர''. முதல் சொற்றொடர் ஒரு பாட்டின் முதல் அடியிலும், அடுத்த சொற்றொடர் அதேபாட்டின் மூன்றும் அடியிலும் வருகின்றன. இப்படியாயின் ''மெய்த் தன்மை அன்பு நுகர'' என்ற சொற்றொடருக்கு என்ன பொருள் கொள்ள வேண்டும் என்று சிந்தித்தால் சிறுத்தொண்டரின் அன்பை மெய்த்தன்மை யுடையதாக்கி அதை நுகர விரும்பி விடையவர் வயிரவராய் வந்தார் என்றே பொருள்

கொள்ள வேண்டும் என்ற முடிவிற்குத்தான் வருவோம்.

நோயின் வலுவுக்கு ஏற்ற மருத்துவம். புற்று நோய்க்கு மாத்திரைகள் மருந்து ஆக மாட்டா. அறுவைதான் செய்தாக வேண்டும். நோயுற்ற அங்கத்தையே அகற்றும் அளவுக்கு மருத்துவம் செய்தாக வேண்டும்.

திருக்குறளில் மெய்யுணர்தல் என்ற பதிகத்திற்குப் பின் அவா அறுத்தல் என்ற பதிகம் வைத்திருப்பதன் தத்துவத்தையும், அப் பதிகத்தின் இறுதிக் குறளாக

ஆரா இயற்கை அவாநீப்பின்
அந்நிலையே
பேரா இயற்கை தரும் (370)

என்ற குறளை வைத்திருக்கும் தத்துவத்தையும் சிந்திப்போமானல் இறைவன் காட்சி கொடுத்து ஞானத்தை அளித்த பின்னரே அவா அறுக்க இயலும் என்பது புலப்படும். இக்கருத்தை வற்புறுத்தவே

''தூ உய்மை யென்ப அவாவின்மை
மற்றது
வாஅய்மை வேண்ட வரும்

என்ற குறளை அமைத்தார். மெய்ப் பொருளை ஆகுபெயரால் வாய்மை என்றார்.

சிறுத் தொண்டருக்குத் தம் மகன் மீது அளவு கடந்த பாசம் இருக்கும் வரையில் அவர் வீடு அடைய முடியாது, மற்றெல்லா வகைகளிலும் முக்திக்குத் தகுதியுடையரவாயினும் இப் பாசத்தால் அவர் முக்தியடையத் தகுதியற்றவராக இருந்தார். கருணாமூர்த்தி ஆய இறைவன் இப்பாசத்தை, அறம் பாவம் ஆகிய அருங்கயிற்றை அறுக்க வழிவகுத்தான்.

கற்று ஈண்டு மெய்ப் பொருள் கண்டவர்கள் ஆதலினால் சிறுத்தொண்டரும் திருவெண்காட்டு நங்கையும் மற்றீண்டு வாரா நெறிக்குத் தலைப்பட ஒரே தடையாய் நின்றது மகன்பால் வைத்திருந்த பாசம்; திருவருளின் துணையால் அதை அறுத்து வீடு எய்தினர்.

இந்நிகழ்ச்சி வினைப்பயனும் அல்ல, போரில் பலரை மாய்த்ததற்குத் தண்டனையுமல்ல. இது சிவபிரான் பேரருள் பூண்டு நிகழ்த்திய திருவிளையாடலாகும்.

இந்நிகழ்ச்சி மூலம் அடியவர் மனைகள்தோறும் சென்றவர் நிலைமை காட்டும் அப்பெருமான் சிறுத்தொண்டரின் பாசத்தை அறுத்து தெள்ளி வடித்தறிந்த பொருள் சிவன் கழலிற் செறிவென்றே கொள்ளும் அவர் உணர்வினை உலகறியக் காட்டினான்.



யூதர்கள் மதத்தில் டோரா. டால்மு(d)ட் என்ற சமய நூல்கள் ஹிந்து மதத்தில் சுருதியும் ஸ்மிருதியும் போன்றவை. வலிமையைப் பற்றி டால்மு(d)ட் கூறுகிறது.

உலகில் பத்து வலிய பொருள்கள் உள. இரும்பு வலிமையானது: ஆனால் தீ அதை உருக்குகிறது. நீ வலிமையானது; ஆனால் நீர் அதை அணைத்து விடுகிறது. நீர் வலிமையானது; ஆனல் மேகங்கள் அதை நீராவியாக மாற்றி விடுகின்றன. மேகங்கள் வலிமையானவை; ஆனால் காற்று அவற்றைக்கலைத்து விடுகின்றது. மனிதன் வலிமையானவன்; ஆனால் அச்சம் அவனைக் கோழையாக்குகிறது. அச்சம் வலிமையானது; ஆனால் தூக்கம் அதை வெல்கிறது. தூக்கம் வலிமையானது. ஆனல் சாவு அதைவி வலிமையானது ஆனலோ ஒருவன் புரிந்த அன்பார்ந்த நேயச் செயல் அவன் சாவுக்குப்பின்னும் (மக்கள் நினைவில்) வாழ்கிறது.

மன நிறைவு பொக்கிஷம் என்ற நூலிலிருந்து 1976 செப்டம்பர் ரீடர்ஸ் டைஜெஸ் எடுத்து வழங்கியது.

கோ. வன்மீகநாதன்.

# யமவாதனை இல்லை

கி. வா. ஜகந்நாதன்.

திருவாரூரில் எழுந்தருளி இருக்கும் தியாகேசன் எல்லா உலகங்களையும் அவற்றில் உள்ள உயிர்களையும் இயங்கச் செய்கிறார் உடம்பை உயிர் இயங்கச் செய்வது போல எல்லாவற்றையும் இயங்கச் செய்யும் உயிராக இருக்கிறார். இனிய நீரை யுடைய கடல் சூழ்ந்த இந்த உலகத்துக்கு இனிய உயிராக இருப்பவர் யாம் என்று அவர் உணர்த்திக் கொண்டிருக்கிறார். வேதம் முதலிய நூல்களின் வாயிலாகவும் தம்முடைய அடியார்களின் வாயிலாகவும் இந்த உண்மையை அவர் புலப்படும்படி செய்திருக்கிறார். அவர் எழுந்தருளியிருக்கும் திருவாரூரில் நல்ல நீர் வளமும் அதனால் நல்ல வயல் வளமும் இருக்கின்றன; அதற்கு அவர் நாதர்.

இன்னீர் உலகத்துக்கு இன்னுயிர்
யாம் என்று உணர்த்தும்
நன்னீர் வயற்கமலை நாதனார்.

தியாகப் பெருமான் எழுந்தருளியிருப்பதனால் அந்த ஊர் வளமுடையதாக விளங்குகிறது. நல்ல நீரும், அந்த நீரால் நெல் முதலியன விளையும் வயல்களும் சூழ்ந்து வளம் நிறைந்து பொலிவது அவ்வூர்.

அங்கே எழுந்தருளியிருக்கும் தியாகேசரின் பெருமையை உணர்ந்து அவருடைய பொற்கழல் பொருந்திய செம்மையான திருவடிகளை அடைந்து அடியார்கள் இன்புறுகிறார்கள். அந்தத் திருவடிக்கே தொழும்பு பூண்டு ஆளாகிறார்கள்.

பொன் ஆர்ந்த
சேவடிக்கு ஆள் ஆனார்.

அவ்வாறு ஆளாகிறவர்கள் சிலரே. உலகில் உள்ள மக்களில் பெரும்பாலோர் உண்மையை உணராமல் உலக இன்பங்களிலே ஈடுபட்டு உழலுகிறார்கள். முற்பிறப்பில் தவம் செய்து அதன் பயனாக இப் பிறப்பில் மெய்ப்பொருளை நாடும் நாட்டமுடையவர்கள் மிகச்சிலரே.

''நோற்பார்
சிலர், பலர் நோலா தவர்''

என்பது திருக்குறள். ஆதலின் முற்பிறவியில் தவம் செய்த சிலரே

தியாகேசருடைய திருக்கோயிலைத் தரிசித்து, அவரை வணங்கி, அவருடைய திருவடிக்குத் தொழும்பு பூண்டு ஆளாவார்கள். அவர்கள் இனி மேல் பிறக்கமாட்டார்கள்.

இப்பொழுது பிறந்திருப்பதனால் அவர்களுக்கு நிச்சயமாக இறப்பு உண்டு மற்றவர்கள் உலகில் வாழ்ந்து தம்முடைய காலம் முடிந்தவுடன் இறபபதற்கும் அந்த அடியார்கள் இறப்பதற்கும் வேறுபாடு உண்டு. மற்றவர்கள் இறந்தால் அவர்களை யமனுடைய தூதுவர்கள் இழுத்துச் சென்று நரகத் துன்பத்தை அடையச் செய்வார்கள்; பிறகு அவர்கள் மீண்டும் பிறப்பார்கள். மறுபடியும் இறந்தும் பிறந்தும் சுழன்று கொண்டே இருப்பார்கள். இதுவே பெரும்பான்மையோரின் வரலாறு.

ஆனால் தியாகேசருடைய சேவடிக்கு ஆளானார் இந்த உடலை விட்டுப் பிரியும் போது அவர்களை அணுக யமதூதுவர் அஞ்சுவார்கள். சிவ கணங்கள் அவர்களை உபசாரத்துடன் சிவலோகத்துக்கு அழைத்துச் செல்வார்கள். அவர்களுக்கு யமபயமோ, அவனால் பிறருக்கு உண்டாகும் தண்டனையோ இரா.

தென்புலத்தில் உள்ளவர்கள் பிதிர்த் தேவர்கள். அவர்களே நம்முடைய பிதிருக்கள் அல்ல. நம்முடைய மூதாதையர்களைக் குறித்து நாம் செய்யும் கடன்களின் பயனை அவர்கள் எங்கே பிறந்திருக்கிறார்களோ, அங்கே சேர்ப்பிக்கும் கடமையைச் செய்கிறவர்கள். அந்தத் தென்புலத்தாருக்குத் தலைவன் யமன். அவன் மக்கள் உயிர் பிரியும் போது அவர்களை அழைத்துச் சென்று தண்டிப்பான்.

தியாகேசருடைய அன்பர்கள் அந்தத் தென் புலத்தார் கோவின் தண்டனைக்கு ஆளாகி வருந்த மாட்டார்கள் சிவபிரானுடைய திருவடியை அடைந்து பேரின்பப் பெருவாழ்வை அடைவார்கள்.

ஆள ஆனார் சிலர்அன்றே தென்
புலத்தார்
கோ அடிக்கு ஆள் ஆகார் குலைந்து.

மிகவும் துன்புறும்படி யமன் தண்டிப்பான். அவ்வாறு மனம் லங்கி அவனுடைய தண்டனைக்கு ஆளாகாதவர்கள் தியாகேசருடைய அன்பர்கள்.

இன்னீர் உலகத்துக்கு இன்னுயிர்
யாம் என்று உணர்த்தும்
நன்னீர் வயற்கமலை நாதனார் - பொன்
ஆர்ந்த
சேவடிக்கு ஆள் ஆனார் சிலர் அன்றே,
தென்புலத்தார்
கோ அடிக்கு ஆள் ஆகார் குலைந்து.

இனிய நீரை உடைய கடல் சூழ்ந்த உலகத்துக்கு இனிய உயிராக இருப்போம் யாம் என்று

உணர்த்துகின்றவரும், நல்ல நீர் வளமும் வயல் வளமும் உடைய திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் நாதனுருமாகிய தியாகேசருடைய, பொற் கழலே அணிந்த செம்மையான திருவடிக்கு ஆளான அன்பர்கள் சிலரே, தென் புலத்தாருடைய தலைவனாகிய யமனுடைய தண்டனைக்கு வருந்தி ஆளாக மாட்டார்.

[கடல் நீர் பயனால் இனியதாயிற்று. உடலுக்கு உயிர் இனியது; அந்த உயிருக்கும் உயிராக இருப்பவர் பின்னும் இனியவர். நன்னீர்-நல்ல நீர் வளம், பொன்-பொன்னுலாகிய கழல்; ஆகு பெயர்; பொலிவு என்றும் பொருள் கொள்ளலாம். ''பொன்னார்ந்த சேவடிக்கு ஒன்றுண்டு விண்ணப்பம்'' என்பது அப்பர் திருவாக்கு. ஆள் ஆனார் - அடிமையான தொழும்பர். அன்றே என்பதில் உள்ள ஏகாரத்தைப் பிரித்துச் சிலர் என்பதனோடும் கூட்டிச் சிலரே என்று வைத்துப் பொருள் செய்க; ஏகாரம் பிரிநிலை. அன்று; அசை. தென்புலத்தார் – பிதிர் தேவதைகள்; அவர்களுடைய தலைவன் யமன். அடிக்கு-அடிக்கும் செயலுக்கு; தண்டனைக்கு. ஆளாகார் - ஆட்படார்; அதற்கு உட்படார்; யமவாதனை இல்லை என்றபடி. குலைந்து ஆளாகார்.]

தியாகேசருடைய அடியவர்களுக்கு யமவாதனை இல்லை என்பது கருத்து.

திருவாரூர் நான்மணிமாலையில் உள்ள 26-ஆவது பாட்டு இது.

# திருப்பணி கொள்ளும் திருநாரையூர்

தென்னார்க்காடு மாவட்டம் காட்டுமன்னார்குடி வட்டம் திருநாரையூர் அருள்மிகு சுயம்பிரகாச சுவாமி ஆலயத்திருப்பணி வேலை திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் அருளாசியினால், நிகழும் துன்மதி ௵ தைமீ 30௳ [12—2—82] அன்று துவக்கப்பெற்று சிதம்பரம் திரு G. வாகீசம்பிள்ளை அவர்களைத் திருப்பணிக் கமிட்டி தலைவராகக்கொண்டு நடைபெற்றுவருகின்றது. அன்பர்கள் திருப்பணிவேலைக்குத்தாராளமாக நன்கொடை அளித்து ஸ்ரீ பொல்லாப்பிள்ளையாரின் அருளுக்குப் பாத்திரராகக் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

S. திருநாவுக்கரசு பிள்ளை,
பொருளாளர்,
திருப்பணிக்கமிட்டி,
9, கனகசபைநகர், சிதம்பரம்.

# திருக்கணித பஞ்சாங்கம்

தி. கி. நாராயணசாமி, கடலூர்-1

துந்துபி ஸ்ரீ கார்த்திகை மீ (1982 நவம்பர் — டிசம்பர்)

திதி, நட்சத்திர காலம் முடியும் நேரம் (ரயில்வே மணிக்கணக்கில்)

| தமிழ்வ. | ஆங்கிலவ. | கிழமை | திதி | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| 1 | (17—11—82) | புதன் | துதியை 23-57 | அனுஷம் 6-15 |
| 2 | (18—11—82) | வியாழன் | திரிதியை 26-16 | கேட்டை 8-45 |
| 3 | (19—11—82) | வெள்ளி | சதுர்த்தி 28-53 | மூலம் 11-39 |
| 4 | (20—11—82) | சனி | பஞ்சமி நாள் முழுதும் | பூராடம் 14-46 |
| 5 | (21—11—82) | ஞாயிறு | ,, 7-39 | உத்திராடம் 17-56 |
| 6 | (22—11—82) | திங்கள் | சஷ்டி 10-18 | திருஓணம் 20-55 |
| 7 | (23—11—82) | செவ்வாய் | சப்தமி 12-38 | அவிட்டம் 23-31 |
| 8 | (24—11—82) | புதன் | அஷ்டமி 14-23 | சதயம் 25-29 |
| 9 | (25—11—82) | வியாழன் | நவமி 15-26 | பூரட்டாதி 26-43 |
| 10 | (26—11—82) | வெள்ளி | தசமி 15-39 | உத்திரட்டாதி 27-08 |
| 11 | (27—11—82) | சனி | ஏகாதசி 15-01 | ரேவதி 26-45 |
| 12 | (28—11—82) | ஞாயிறு | துவாதசி 13-37 | அசுவனி 25-39 |
| 13 | (29—11—82) | திங்கள் | திரயோதசி 11-31 | பரணி 23-56 |
| 14 | (30—11—82) | செவ்வாய் | சதுர்த்தசி 8-53<br>Oபௌர்ணமி 5-51 | கிருத்திகை 21-46 |
| 15 | (1—12—82) | புதன் | பிரதமை 26-34 | ரோகிணி 19-16 |
| 16 | (2—12—82) | வியாழன் | துதியை 23-14 | மிருகசிரிஷம் 16-42 |
| 17 | (3—12—82) | வெள்ளி | திரிதியை 19-58 | திருஆதிரை 14-08 |
| 18 | (4—12—82) | சனி | சதுர்த்தி 16-54 | புனர்பூசம் 11-44 |
| 19 | (5—12—82) | ஞாயிறு | பஞ்சமி 14-11 | பூசம் 9-39 |
| 20 | (6—12—82) | திங்கள் | சஷ்டி 11-53 | ஆயில்யம் 7-58 |
| 21 | (7—12—82) | செவ்வாய் | சப்தமி 10-05 | மகம் 6-45<br>பூரம் 6-05 |
| 22 | (8—12—82) | புதன் | அஷ்டமி 8-50 | உத்திரம் 5-58 |
| 23 | (9—12—82) | வியாழன் | நவமி 8-09 | அஸ்தம் 6-24 |
| 24 | (10—12—82) | வெள்ளி | தசமி 8-02 | சித்திரை நாள் முழுதும் |
| 25 | (11—12—82) | சனி | ஏகாதசி 8-28 | சித்திரை 7-22 |
| 26 | (12—12—82) | ஞாயிறு | துவாதசி 9-24 | சுவாதி 8-49 |
| 27 | (13—12—82) | திங்கள் | திரயோதசி 10-48 | விசாகம் 10-42 |
| 28 | (14—12—82) | செவ்வாய் | சதுர்த்தசி 12-37 | அனுஷம் 13-00 |
| 29 | (15—12—82) | புதன் | ●அமாவாசை 14-48 | கேட்டை 51-38 |

# சித்தாந்த சாத்திரங்கள்

## மு. அருணாசலம்.

### திருஉந்தியார்

முற்கூறிய இரு பழைய உரைகளன்றி மற்றொரு பழைய உரையும் உள்ளது. அது செய்தவர் பெயர் தெரியவில்லை. ''ஒரு சிவஞானச் செல்வர் அருளிச் செய்த உரை'' என்று ஈசான சிவாசாரியர் இதைக் குறிப்பிட்டிருக்கிறார். அந்த உரையை இலக்கணம் ஸ்ரீ முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் பிரதி செய்து வைத்திருந்தார்கள். இவர்கள் சூரியனார் கோயில் ஆதீனத்தே ஒப்பற்ற ஆசாரியராக விளங்கியிருந்த ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமார சுவாமி தேசிகரவர்களிடம் தீக்ஷைகளைப் பெற்று சைவ சந்நியாசமும் பெற்றிருந்தவர்கள். இவர்கள் தமிழ் நாடு செய்த புண்ணியத்தால் முதன் முதலாக சிவஞான பாடியத்தை இரவலாகப் பெற்று, பிரதி செய்வித்து அச்சிட்டு வெளிப்படுத்திய சிறப்புடையவர்கள் என்றால், வேறு சொல்வது மிகை. இவருடைய உரைப் பிரதியானது திருவுந்தியாரையும் அதற்கு நேரான திருக்களிற்றுப்படியாரையும் ஒருங்கே சேர்த்து உரை சொல்வதாகும். இதனுடைய தன்மைகளைப் பிறகு விரிவாய்ப் பார்ப்போம்.

இனி இக்காலத்தெழுந்த புதிய உரைகளில் முதலாவது சிறப்பாய்க் குறிப்பிடத்தக்கது காஞ்சிபுரம் ஆலால சுந்தரம் பிள்ளை எழுதிய 'சித்தாந்த போத ரத்னாகரம்'' என்னும் பெயருடைய புத்துரை. இவரும் உந்தி களிறு இரண்டையும் ஒருங்கு வைத்து உரை எழுதியிருக்கிறார். இவ்வுரை தில்லைச்சிற்றம்பலவர் உரையை ஒப்ப விரிவும் சிறப்புமுடையது. மேலும் இவர் திருவுந்தியார் 45பாடலுக்கும் சிவஞானபோதச் சூர்ணிக் கொத்தைப் போல மிகவும் சிறப்பான தொரு சூர்ணிகை எழுதியிருக்கிறார். பின்னர் திருவுந்தியாரின் பாடற் பொருளை, சொற்பொருள் நிற்கும் நிலை, திருவுந்தியாரும் ஏனைய சித்தாந்த சாத்திரங்களும் கொண்ட பொருள் நிலை, திருவுந்தியாரில் சிவஞானபோதம் நிற்கும் நிலை, திருவுந்தியார் நிற்கும் நிலை என்ற தலைப்புக்களில் இவற்றின் சித்தாந்தப் பொருள்களை விரிவாய் எடுத்து

ஆராய்கிறார். இப்பகுதி சித்தாந்த சாத்திர நுண்பொருள்களை அறிய விரும்புவோர்களுக்கு அரியதொரு விருந்து.

மற்றொரு சிறப்பான புதிய உரை சித்தாந்தப் பேராசிரியர் க வச்சிரவேல் முதலியார் எழுதிச் சைவ சித்தாந்த வெளியீடாக 1946இல் வெளிவந்த தனி நூல். இது எளிமையான உரை. பாடல்கள் முழுமையும் தெளிவுபடுத்தி, சில தலைப்புக்களுள் தொகுத்துரைப்பது. இதன் 11ஆம் பாடல் உரையில், பாகத் தியாகம் என ஒரு பொருளைக் குறிப்பிட்டுப் பின்னால் அனுபந்தத்தில் அதை விரித்துரைக்கிறார். அதாவது தத்துவமசிப் பொருளை இயைத்துக் காட்டுவது, இவை இரண்டுமே இக்காலத் தெழுந்த சிறப்பான உரைகள்.

வரலாறுகள்

இனி, இரு பழைய உரைகளின் தொடக்கத்தில் காணப்படும் அவதாரிகைகளில் கூறப்பட்ட நூலாசிரியர் வரலாறு குறித்து இங்குச் சில சொற்கள் கூறுவது பொருந்தும். பொதுவாகச் சைவ உலகில் உந்தி களிறு வரலாறுகள் செவி வாயிலாகவே வழங்கிவந்தனவே ஒழிய, அவற்றுக்கு எந்த ஆதரவும் இருப்பதாகத் தெரியவில்லை. இரண்டு உரைகாரரும் தம் முறைக்கு அவதாரிகையாக வரலாறுகளைச் சொல்லுகிறார்கள். பொழிப்புரையின் அவதாரிகை சைவசித்தாந்த சமாஜ சித்தாந்த சாத்திர உரை இரண்டாம் பதிப்பில் 1940ல் எம்மால் வெளியிடப்பட்டது. தில்லைச்சிற்றம்பலவர் அவதாரிகை ஏடுகளில் இருந்த போதிலுங்கூட, முதன் முதலாகச் சென்ற ஸ்ரீகுமரகுருபரர் புரட்டாசி இதழில் தான் எம்மால் வெளியிடப்பட்டது. உண்மையில் இவை இரண்டுமே நாம் கற்கிற உந்தி களிறு வரலாற்றுக்கு ஆதரவுகள். இரண்டினுடைய பொதுப் போக்கும் ஒன்றாகவே உள்ளது. இருவரும் சிவபெருமான் தென்னாடு நோக்கி வந்த உய்யவந்த தேவர் என்னும் நாமம் பூண்டு திருவியலூரை அடைந்த போது அங்கு ஆளுடைய தேவநாயனார் கண்டு தரிசித்ததாகச் சொல்லுகிறார்கள். அவர், 44 திருவுந்தப்பாடல்களைச் செய்து 45ஆம் பாடலில் தம்முடைய பெயரை அமைத்து ஆளுடையதேவருக்குஉபதேசம் செய்தார் பின் 'உய்யவந்த தேவர் தன்னியல்பை அடைந்தார்'' என்று முதல் உரை சொல்ல, ''உத்தர பூமிக்கு எழுந்தருளினார்'' என்று இரண்டாவது உரை சொல்லுகிறது. மேலும் பிந்திய உரை, இந்தச் சாத்திரத்தைப் பின் வருவோர்க்கு உபதேசிக்கும்படி கட்டளையிட்டதாகவும் சொல்லுகிறது.

அடுத்து, திருக்கடவூர் உய்ய வந்தார் வரலாற்றைக் கூறும் பொழுது அவர் கீழ்ச்சாதி என்றும், அது காரணமாக நூலின் பெருமையை உணர்த்தும் பொருட்டு பஞ்சாக்கரப் படியில் இருக்கிற களிறு கடவூர் உய்யவந்தார் செய்த நூலை எடுத்து மேற்படியில் வைத்த காரணத்தால் நூலுக்குத் திருக்களிற்றுப்படியார் என்னும் பெயர் வந்தது என்னும் விளக்கத்தை முந்திய உரை சொல்கிறது.

திருக்களிற்றுப்படிக்கு உள்ளுறை திருவுந்தியார் ஆதலால், பின்னால் ''இவற்றுக்கு பாஷ்யம் செய்த தாதாக்கள் திருவுந்திக்கு விருத்தி பாடாமல் திருக்களிற்றுப்படிக்கு விருத்தியிட்டு அருளினார்கள்'' என்று தில்லைச்சிற்றம்பலவர் கூறுகிறார். காழிக் கண்ணுடைய வள்ளல் என்ற பெருஞானி திருக்களிற்றுப்படியாருக்கு மட்டும் ஓர் அனுபூதி உரை எழுதியிருக்கிறார். இதையே சிற்றம்பலவர் குறிப்பிடுகிறார் என்று கருத வேண்டும். இந்த விளக்கம் 1962இல் எம்மால் அச்சிடப் பட்டது. இவ்வாறு உந்தியார் பற்றிய வரலாறுகள் தெளிவாக அறிந்து கொள்ளத்தக்கன.

உந்தியார் சகம் *1070*(கி.பி*1147*) இலும் களிறு சகம் **1100**இலும் (கி.பி *1177*) செய்யப்பட்டவை என்று பொதுவாகக் கருத்து வழங்குகிறது. இதற்கு ஆதாரம் விளங்கவில்லை.

முக்கியமான மற்றொரு சிந்தனையும் இங்கு எழுகின்றது: உந்தி செய்தவர் மானுடச் சட்டைசாத்தி எழுந்தருளிய சிவன் என்றும், அவர் பிறகு தன்னியல்பை அடைந்தார் என்றும், அவர் உத்தரபூமியினின்றும் வந்த பரம கல்யாணன் என்றும் உந்தியார் உபதேசித்த பின் உத்தரபூமிக்கே எழுந்தருளினார் என்றும் இரு வரலாறுகளும் குறிப்பிடுகின்றன. உத்தரபூமி என்பது கயிலாயம்.

மெய்கண்டாருக்கு உபதேசம் செய்தவர் கயிலாயத்திலிருந்து வந்த பரஞ்சோதி முனிவர். இந்த வரலாற்றுக்கும் ஆதாரம் இல்லை; நாம் அறிந்த வரையில் இதற்கு ஆதாரமாய் உள்ளது 19ஆம் நூற்றாண்டின் பிற் பகுதியில் சாமிநாத தேசிகர் என்பவர் செய்த சந்தான ஆசாரியர் புராணசங்கிரகம் என்ற சிறுநூல்தான்.

எம்முடைய கருத்து, வரலாற்றுத் தெளிவு இல்லாது வெவ்வேறாகக் குறிப்பிடுகின்ற திருவியலூர் உய்யவந்ததேவரும் பரஞ்சோதி முனிவரும் ஒருவராகவே இருத்தல் கூடும் என்பதாகும்.

இக்கருத்தை விளக்க இது இடமில்லை. இதைப் பின்னே விளக்குவோம். இவ்வளவோடு இந்தக் குறிப்பை நிறுத்திக் கொண்டு திருவுந்தியார் கூறும் பொருளைச் சிறிது நோக்குவோம்.

(வளரும்)

# இதமான வாழ்வுக்கு எளிய வழிகள்

1. கீல்வாய்வு அகல

முருங்கைவேர் சாருடன் ஆவின்பால் கலந்து பருகி வர கீல்வாய்வு குணமாகும்.

2. தலைவலிக்கு

முருங்கை இலையுடன் மிளகு சிறிது சேர்த்து அரைத்து நெற்றியில் பற்றுப் போட தலைவலி நீங்கும்.

3. காதுமந்தம்

பூண்டு, இஞ்சி, முருங்கைக் கொழுந்து இதன் ரசத்தை சில துளிகள் காதில்விட காதுமந்தம் குணமாகும்.

Dr. N. சடையப்பன்.



# ஸ்ரீ கயிலைமாமுனிவருக்குப் பாராட்டு விழா

## (தஞ்சை மாவட்ட சைவ வேளாளர் சங்கம் அளித்தது)



ஆளும் நாயகனைக் கயிலையில் கண்டு தரிசித்த கயிலைமாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களுக்கு, தமிழ்நாடு சைவ வேளாளர் சங்கத்தின் அனைத்துக் கிளைகளும் ஒருங்கிணைந்து மயிலாடுதுறை - சித்தர்காடு அண்ணா திருமண மண்டபத்தில் துந்துபி ஆண்டு ஐப்பசித் திங்கள் பதினைன்காம் நாள் (31-10-82) ஞாயிறு அன்று பாராட்டு விழா நடத்தின.

30-10-82 மாலை 4-25 மணி அளவில் ஸ்ரீ கயிலைமாமுனிவர் எழுந்தருளினார்கள். முதலில் சம்பந்தர் கோயிலில் தரிசனம் செய்தார்கள். விநாயகர் ஆலயத்திலிருந்து மெய்யன்பர்களும், சைவத் தொண்டர்களும் புடைசூழ ஊர்வலமாக அழைத்து வரப்பட்டார்கள். விழாக்குழுவினரான மூவலூர் மைய சைவ வேளாள சங்கத்தினர், சுவாமிகளைப் பூரண கும்பத்துடன் வரவேற்றுச் சிறப்பித்தனர். திருவிடைமருதூர், திரு. V. குஞ்சிதபாதம் பிள்ளை அவர்கள் முன்னிலையில் மாலை 5-30 மணியளவில் பாராட்டு விழாத் தொடங்கியது. விழாக் குழுத்தலைவர் திரு. V. பாலசுப்பிரமணிய பிள்ளை அவர்கள் கயிலைமாமுனிவரையும், விழாவிற்கு வந்திருந்தோரையும் வரவேற்றார்.

வரவேற்புக் குழுவின் சார்பில் திரு. S. அரங்கநாதன் வரவேற்பிதழ் படித்தளித்தார். பேராசிரியர். மு. சிவச்சந்திரன் அவர்கள் தருமையாதீன குருமகா சந்நிதானத்தின் ஆசியுரையினைப் படித்தளித்தார்.

சைவ நெறிக்காவலர் திரு. N. காங்கேயம் பிள்ளை அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினார். கயிலைமாமுனிவருக்குச் சைவ வேளாளர் சங்கத்தின் சார்பில் பொன்னாடை அணிவித்துப் பாராட்டுக் கேடயம் அளித்தார். தலைமை உரையில் ''சைவத்தின் பெருமையினைக் கூறி ஸ்ரீ கயிலை மாமுனிவர் நமக்காகவே கயிலை சென்று வந்தார்கள். அவர்களைப் பாராட்டுவது நம் கடமை'' என்றார்.

கயிலை சென்று வந்த சுவாமிகளை மாயூரம் இந்து முன்னணியின் தலைவர். திரு. சொக்கலிங்கம்,

மூவலூரி அன்பர் திரு: S. திருநாவுக்கரசு, பேராசிரியர் திரு. செல்வக்கணபதி, பேராசியர் திரு. டாக்டர் சொ. சிங்காரவேலனர் ஆகியோர் பாராட்டிப் பேசி ஞர்கள்.

ஸ்ரீ கயிலைமாமுனிவர், தம் அருளு ரையில், தாம் கயிலை சென்று வந்த காட்சிகளை, எளிமையாக வும், இனிமையாகவும், சுவையாக வும் தொகுத்துரைத்தார்கள்; கயிலைப் பயணம் பேரின்பம் நல்கும் என்பதனையும், ஒவ்வொருவரும் கயிலைக் காட்சி காண வேண்டும் என்பதையும் சுவாமிகள் உணர்ச்சி பொங்கக் கூறினுர்கள். சமுதாய மும், சமயமும் இணைந்தே வளர வேண்டும்; சைவர்கள் தங்களை நன்கு வெளிப் படுத்திக் கொள்ள வேண்டும். குரு பீடங்களைப் போற்றி வாழ வேண்டும். திரு மடங்களில் தொண்டு செய்ய முன்வர வேண்டும். ஆதீனங்களைப் பற்றி இழிவாகப் பேசுவது கூடாது என்பன போன்ற நல்ல கருத்துக்களைக் கூறினுர்கள்.

சைவ வேளாளர் சங்கத்தின் சார்பில், இரண்டு மாணவர் களுக்கு உதவித் தொகையினை ஸ்ரீ சுவாமிகள் அளித்தார்கள்.

'சைவ முரசு' திரு. S. திருநா வுக்கரசு அவர்கள் நன்றி கூற விழா இனிதே நிறைவுற்றது.

## திருச்சியில் வரவேற்பு

17-10-82 அன்று திருத்தவத்துறை மகளிர் மேனிலைப்பள்ளியில் வரவேற்பு விழாச் சிறப்புற நடைபெற்றது. திருக்கோவில் வழிபாட் டிற்குப் பின் திரு. ஜி. கனகசபை பிள்ளை இல்லத்தில் பாதபூஜையும், மகேஸ்வர பூஜையும் வெகுவிமரிசையாக நடைபெற்றது.

பின் மாலை 6-00 மணியளவில் திருச்சி மாணிக்கவிநாயகர் வழி பாடும், பின் மலைக்கோட்டை உச்சிவிநாயகர் வழிபாடும், நூற்றுக் கால் மண்டபத்தில் பெரியதொரு அளவில் வரவேற்று விழா நடந்தது. கயிலைமாமுனிவர் அவர்கள் அருளுரை நிகழ்த்தினுர்கள்.

## அம்பர் மாகாளம்

4-11-82 அன்று அம்பர் மாகாளம் ஸ்ரீகாசி விநாயகர் குடமுழுக் கின்போது, எழுந்தருளிய கயிலைமாமுனிவர் அவர்களுக்கு சைவவேளா ளர் சங்கத்தின் சார்பில் வரவேற்பு விழா நிகழ்ந்தது.

************************

# எய்ப்பனில் உதவும் மெய்ப்பொருள்

************************

புலவர் முருகு. சுவாமிநாதன், எம். ஏ, பி. லிட்.

'முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்'

என்பது பொய்யாமொழி. முயற்சியில் தளராதவர் முன்னேற்றம் அடைதல் உறுதி. இருப்பினும் அம் முயற்சியும் நன் முயற்சியாக, புரை தீர்ந்த நன்மை பயப்பதாக அமைய வேண்டும். பிறர்க்குத் திங்கு விளைக்கும் வகையில் அமைவதும், பிறருடைய உயர்வைக் கண்டு அதனுல் அழுக்காறுற்று அவரின் நலத்தைக் குலைப்பதுமாக அமைந்து விடக்கூடாது. சுருங்கக் கூறின் வாய்மைக்கு இலக்கணம் வகுத்தமை போல, ''யாதொன்றும் தீமையிலாத செயல்'' என்பதே முயற்சியின் முன் எண்ணமாக இருக்க வேண்டும். பிறர் பொருளை வெஃகியும், பிறர் நலத்தைக் குலைக்கவும் எடுத்த முயற்சிகள் அவர்க்கே திமையாய் முடிந்தமையைப் புராண, வரலாற்று நூல்கள் வழி அறியலாம். எனவே முயற்சியின் அடிப்படையில் தூய எண்ணம் இருக்க வேண்டும். நற்பயனை விளைவிப்பதாகவும் அது இருக்க வேண்டும். இல்லையேல் அது விழலுக்கிறைத்த நீராக அமையும்

முயற்சி நன்முயற்சியாக, நல் விளைவைத் தோற்றுவிக்காததாக இருப்பின் அதனுல் பயனில்லை; மனச்சோர்வுதான் மிஞ்சும். எனவே முயலும் போதும் தக்கதை அறிந்து அதன் வழி முயல வேண்டும்.

ஆன்மிக நெறிக்கும் இது மிகப் பொருந்தியதாகும். எது மெய்ப் பொருள்? அதன் இயல்பென்ன? அதன் அருள்திறம் எத்தகையது? என்பன போன்ற வினுக்களின் அடிப்படையில் நற்சமயங்கள் ஆனவற்றின் நல்லாறு தெரிந்துணர வேண்டும். அதை விடுத்து மயக்குகின்ற சமய நெறிகளிலும், சமயவாதிகளின் பேச்சிலும் ஆழ்ந்து, உண்மையுணராது, உயர்வை அடைய உரியதல்லாத நெறியில் முயற்சி செய்வோர் உண்டு. அவர்களைக் கண்டு அடையாளம் காட்டுகின்றனர் அருளாளர்கள். அவர்களின்

செய்கையைக் கண்டு எள்ளி நகைத்து அவர்களின் இழி செய் கைக்கொத்த எடுத்துக்காட்டு களை, ஏற்ற உவமைகளை நிரம்பப் பெய்து உண்மையை உணர்த்து கின்றனர். இதன்வழி, மெய்ப் பொருளின் இயல்பை உணர்ந்து மெய்ந்நெறி நிலைப்பட வேண்டும் என்பதே அவர் தம் உள்ளக்கிடை.

பால், உணவாகவும், மருந் தாகவும் பயன்படுவது; நிறைந்த சத்துப் பொருள்களைக் கொண் டது. தூய்மை நிறைந்த பசுவின் பாலைப் பெற ஒருவன் என்ன செய்ய வேண்டும்? பலன் தரு கின்ற, கன்றின்ற பசுவைத் தேர்ந் தெடுக்க வேண்டும். நல்ல தூய பசிய புல்லை அதற்கு உணவாக அளிக்க வேண்டும்; அதற்கு வேண்டும் புண்ணாக்கு, பருத்தி கலந்த நீரை அளித்தும், பிற விலங்குகளிடமிருந்து அதற்குத் துன்பம் நேராமல் காத்தும், அதன் உடலில் நேரும் நோய் களுக்கு மருந்தளித்தும் போற்ற வேண்டும்.

இதற்கு மாறுகப் பொழிலில் விளைந்த பசுமையான புல்லைக் கறக்கும் தன்மையில்லாத கல் லால் செய்யப் பெற்ற பசுவின் வாயில் திணித்துத் தூய்மையான நீரை அதற்குக் கொடுத்து அரிய சுவை மிகுந்த பாலைப் பெற விரும்பி அதனுடைய பெரிய காம்புகளைப் பிடித்திழுக்கும் பேதையரும் உள்ளனர். இவர்க ளின் செய்கையை,

———————— வறிதே
புறவார் பசும்புல் கறவாக் கற்பசு
வாயிடைச் செருகித் தூயநீர் உதவி
அருஞ்சுவைப் பால்கொளப் பெருஞ்
சுரை வருடும்
பேதையர் போலவும்

[திருக்கழுமலமும் மணிக் கோவை] எனச் சுட்டிக்காட்டுவர் பட்டினத்துப்பிள்ளையார்.

கனியென்பது முதனிலைத் தொழிற்பெயராய்ப் பொருள் களின் முதிர்ந்த நிலைமையைக் குறிக்கும். ஒரு செய்கையில் முதிர்ந்தவராய்த் தோய்வுடை யாரையும் 'பழம்' என்று குறிப் பதுண்டு. கனி சுவையானது; உடலுக்கு நலன்களை விளைவிப் பது; என்பதை உணர்ந்து கனியை உண்ண விரும்புவன் நினைத்த அளவில் பெற்றுவிட முடியுமா? அது இயலாதன்றோ? குறிப்பிட்ட ஒரு கனியைப் பெற விரும்பியவன் அக்கனியைத் தரக் கூடிய செடியின்- கொடியின்- மரத்தின் - வித்தினை - நன்கு முதிர்ந்த வித்தினைத்தேர்ந்து விதைத்து, நீர்பாய்ச்சி, விலங்கு, பறவை, மனிதர் ஆகியவற்றி னின்றும் காக்க, ஈகூட நுழைய முடியாத நெருக்கமான வேலி யிட்டுக் காத்துப் பின் காய்த்துக் கனிந்ததம் கொள்ளவேண்டும்.

காஞ்சிரங்காய் போல நஞ்சு மிகுந்த எட்டியின் விதையை விதைத்து நீருட்டி, வேலியிட்டு, உரிய முறையில் பயிர்செய்து இனி யசுவை மிகுந்த ஔவையுண்ட நெல்லிக்கனி போன்ற அமிழ்தான கனியைப் பெற விரும்புகின்ற அறிவற்ற மூடர்களைக் கண்டு எள்ளிநகையாடுகின்றார் அடிகள். அவர்களை அதிர்ஷ்டங் கெட்டவர்கள் என்று அழைக்கிறார்.

——————————— ஒதுநஞ் சமரும்
எட்டியை விரும்பி மட்டுநீர்த் தேக்கி
ஈநுழை கல்லா மேல்நிமிர் வேலி
உறும்படி அமைத்து நறுங்கனி கொள்ளக்
கருதி முயலும் திருவிலி போலவும்

[திருக். மும். கோ.]

தென்னக மக்களின் பெரும் பாலான உணவுப் பொருளாகப் பயன்படுவது அரிசியாகும். அவ் வரிசியிலும் எத்தனையோ வித மான பெயர்களைக் கொண்ட–ஐ. இ. டி, ஏ. டி. டி., பொன்னி, கருணை, போன்ற பெயர்களைக் கொண்ட–ரகங்கள் உண்டு. அந்த ரகங்களின் பெயர்கள் அவற் றின் தன்மைக்கும், தரத்துக்கும் கால அளவிற்கும் ஏற்ப கொடுக்கப்பட்ட பெயர்களாகும். அவற்றிடையேயும் நீண்ட, குறு கிய, சத்துள்ள, சத்துக்குறை வான வகைகளும் உண்டு. எனவே வளம்மிகுந்த வாழ்வினைப் பெற விரும்புவோர் சத்துமிகுந்த, அழகிய, கொழுவிய அரிசியினைப் பெற்று உணவாக்கிச் சோறுண்டு மகிழ்வர். உணவுண்பதற்காகச் சோறாக்க வேண்டும் என்று கருதி முதிர்ந்த, நீண்ட அரிசியினை உலை யில் போடக்கருதி, வெறுமை யான உமியினைக் குற்றுகின்ற மூடரும் உலகத்துள்ளனர். அவர் களைப் 'பற்றிலர்' என்றழைக்க லாம் என்கிறார் பிள்ளையார்.

இலகுவால் அரிசி உலைபெய எண்ணி
வெற்றுமி குற்றும் பற்றிலர் போலவும்

தாம் செய்கின்ற செய்கைக்குப் பொருள் அறியாது அதன் விளை வறியாது செய்கின்றவர் 'பித்தர் எனப்படுவர். உன்மத்த ரென்றும் அவரைச் சொல்வ துண்டு ''மத்த மனத்தொடு மாலி என்ன மனநினைவில்'' என்பர் மணிவாசகர். ஒரு செயலைச் செய் தால் தான் அதன்முடிவில் நல்ல, தீய விளைவுகள் ஏற்படும். அச் செயலைச் சிந்திப்பதோடு நிறுத்தி விட்டுச் செயலாற்ற வில்லை-யென்றால் அதனால் பயன் ஏது மில்லை. உதாரணமாக, நல்ல நிலத்தில் பயன்பெற விரும்பிய ஒருவன் நிலத்தை உழுது, சத் துள்ள எருவினை இட்டு, பயிர் வளர்ந்து முற்றிய பின்னர் பயனை கொள்ளுதல் வேண்டும். அதனை விடுத்து இச் செயல்களைச் செய் யாது வாளா சிந்திப்பதோடு நிறுத்திவிட்டுப் பயனை மட்டும்

பெற எண்ணினுல் அது சாத்திய மாகாதன்ரோ? இவ்வாறு, செய லாற்ருது சிந்திக்கமட்டும் செய்து பயன் விரும்பும் மனக்குறைவுடை யாரை'மத்தர்' என்கிருர் அடிகள்

அருநிலம் உழுதநின் எருமிகப் பெய்து
வித்திட் டாங்கே விளைபயன் கொள்ளும்
சித்தத் துன்றும் மத்தர் போலவும்

இவ்வாறு கற்பசு கறந்தும் எட்டி விதைத்தும் அருங்கனிபெற விழைந்தும், வெற்றுமி குற்றியும் விளைபயன் பெறத் தொழிலாற் ருது சிந்தையில் மட்டும் எண்ணி யும் வாழ்கின்ற புல்லரை நமக்கு அடையாளம் காட்டுகின்ருர். அவர்களைக் கண்டு இரக்கமும் கொள்கின்ருர். அவர்கள் வாழ்க் கை வீணைது; அவருடைய வாழ்நாள்' என்பது 'விழ்நாள்' ஆகும்; அவர்தம் வாழ்வியல் அர்த்தமற்றது. இப்பிறப்பிலும் நல்லன ஆற்ருது, எதிர்வருகின்ற பிறப்பிற்கும் நல்லதைச் செய்து பயனைப் பெற விழையாது துன் பத்தில் உழலும் மாந்தர் ஒருவரா இருவரா? அல்லர்; பலர்.

வாழ்நாள் அனைத்தும் விழ்நா ளாக்கி
இம்மையும் மறுமையும் செம் மையில் பொருந்தாது
இடருறும் மாந்தர் புடவியில் பலரால்

இத்தன்மையுடையார் பலரா யினும் அவ்வாறே சிந்தித்துச் செயல்பட்டுத் துன்பத்தில் உழலா வகையில் உண்மைப் பொருளே வந்து நிலையினஇவை என்ற உணர்த்தியது என்கின்ருர் பட்டினத்தடிகள்

அன்னவா றெளியனும் உன்னி மதிமயங்காது
எய்ப்பினில் உதவும் மெய்ப்பொரு ளாகி
என்றும் ஓர் இயல்பொடு நின்ற காரண!

இப்படிப்பட்ட முறையிலெல் லாம் இறைவன் அடியினை அடை யாத- தொழும்பிணுட்படாத மாந்தரின் இயல்புகளை எடுத்துக் காட்டுவதும்இரக்கம்ஊட்டுவதும் மற்றவர் அவரோடு சேர்ந்து விடக்கூடாது- என்ற அருள் உள்ளத்தாலேயாகும்.

---

## மழை வேண்டிச் சிறப்பு வழிபாடு

தமிழக அரசின் ஆணைப்படி இந்து அறநிலைய ஆட்சித்துறை வேண்டுகோளுக்கிணங்க தமிழ்நாடு சைவவேளாளர் சங்கத்தின் சார்பாக 'மழை வேண்டி சிறப்புச் வழிபாடு' 19.10.82 காலை 10.30 மணி உளவில் மாநிலத்தலைவர் N. காங்கேயன் பிள்ளை அவர்களின் தலைமையில் கும்பகோணம் அருள்மிகு சோமேஸ்வரர் ஆலயத்தில் நடைபெற்றது. இவ்வழிபாட்டில் பெரும்பாலான சைவ அன்பர்களும் சைவவேளர் சங்கம் பொறுப்பாளர்களும், உறுப்பினர்களும் கலந்து கொண்டனர்.

உ

சிவ சிவ

திருக்கொள்ளம்பூதூரில்

# திருநெறிய தேவாரத் திருமுறை இன்னிசை



திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து 21 ஆவது அதிபர்

கயிலைமாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்**

**சுவாமிகள்** அவர்களின்

அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது

துந்துபி ஆண்டு ஐப்பசித் திங்கள் 29 ஆம் நாள் (15—11—82) திங்கட்கிழமை மாலை 6 மணி அளவில்.

திருமுறைவாணர்கள் :-

1. தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்
   திரு. T. M. விசுவலிங்கம் சபாபதி சகோதரர்கள்,
2. தேவார இசைமணி
   திரு. S. முத்துக்கந்தசாமி தேசிகர்,
   ஸ்ரீகாசிமடம் கட்டளை ஓதுவார், திருச்சிராப்பள்ளி
3. இசைநம்பி
   திரு. S. கல்யாணசுந்தர தேசிகர்,
   ஸ்ரீகாசிமடம் கட்டளை ஓதுவார், கும்பகோணம்.
4. திரு. S. L. சாமி,—பிடில் – திருச்சி.
5. திரு. G. வேங்கடராமன்—மிருதங்கம்
   திருப்பனந்தாள்.

M. மகாலிங்கம்,
நிர்வாக அதிகாரி
ஸ்ரீ வில்வாரண்யேசுவரசுவாமி
தேவஸ்தானம்
திருக்கொள்ளம்பூதூர்.

அருளாணையின் வண்ணம்,
முத்து. மெய்கண்டதேவன்
மானேசர், ஸ்ரீகாசிமடம்,
திருப்பனந்தாள்.



# பெண்ணாகடத்தில்

## "கயிலைமாமுனிவருக்கு" வரவேற்பு



20—9—82 அன்று மதியம் திரு. ந. ஞானப்பிரகாசம் பிள்ளையவர்கள் இல்லத்தில் தம்பதியர் ஸ்ரீ-ல-ஸ்ரீ கயிலைமாமுனிவர் அவர்கட்குப் பாதபூஜையும், மற்றும் மகேஸ்வர பூஜையும் நிகழ்த்தினார்கள. பெண்ணாகடம் நகர வரவேற்பு நிகழ்ச்சிக்கு மூலகாரணமாக இருந்தவர் அன்பர் திரு. அ. இராதாகிருஷ்ண பிள்ளையவர்கள் ஆவர்.



## ஆலய பூஜை படிக்காசு நிதிக்கு

## நன்கொடை அளித்த அன்பர்கள் விபரம்

| | |
|---|---|
| 5—10—82 வரைகூடுதல்— | ரூ. 14561-10 |
| 1982 அக்டோபர் மாதம் | |
| 1. திருப்பனந்தாள் திரு. தா. ம. வெள்ளைவாரணம் | 10–00 |
| 2. சென்னை திரு. P. கிருஷ்ணன் | 10–00 |
| 3. கும்பகோணம் துர்க்கா குடில் திரு. அப்பு | 5–00 |
| 2—11—82 வரை ஆகக் கூடுதல் | 14586-10 |

# சிவப்பிரகாசம்

கு. சுந்தரமூர்த்தி எம். ஏ., திருப்பனந்தாள்.

தெளிவுரை

வீடுபேற்றின் திறம்

அரிவையர்இன் புறுமுத்தி; கந்தம் ஐந்தும்
அறுமுத்தி; திரிகுணமும் அடங்கும் முத்தி;
விரவுவினை கெடும் முத்தி; மலம்போல் முத்தி;
விக்கிரக நித்த முத்தி; விவேகமுத்தி;
பரவுமுயிர் கெடு முத்தி; சித்தி முத்தி;
பாடாண முத்தி; இவை பழிசேர்முத்தி;
திரிமலமும் அகலஉயிர் அருள் சேர்முத்தி
திகழ் முத்தி; இதுமுத்தித் திறத்த(து) ஆமே.

(தெ-ரை) மகளிரிடத்துத் துய்க்கும் இன்பமே வீடுபேறு என்றும் (உலகாயதம்), உருவம் முதலிய ஐந்து கந்தங்களும் கெடுதலே வீடுபேறு என்றும் (சௌத்திராந்திகர்), மூவகைக் குணங்களும் அடங்குவதே வீடுபேறு என்றும் (நிகண்டவாதி), பொருந்திய செயலறுவதே வீடுபேறு என்றும்(பிரபாகரம்), ஆணவமலம் கெடுவதே வீடுபேறு என்றும்(பேதவாதி), அழியா உடல் பெறுவதே வீடுபேறு என்றும்(உருவசிவசமவாதி), பிரகிருதியையும், புருடனையும் வேறுபடுத்தி அறிவதே வீடுபேறு என்றும்(சாங்கியன்), நீக்கமற நிறைந்திருக்கும் உயிர் கெடுவதே வீடுபேறு என்றும்(பாற்கரியன்), எண் வகைச் சித்திகளையும் அடைவதே வீடுபேறு என்றும்(சித்தர்), உயிர் யாதொரு செயலுமின்றிக் கல்லைப்போலக் கிடப்பதே வீடுபேறு என்றும் (பாடாணவாதி) கூறப்படும் இவையெல்லாம் குற்றமுடைய வீடுபேறுகளேயாம்: மும்மலங்களுள் நீங்க உயிர் சிவபரம் பொருளைச் சேருகின்ற வீடுபேறே மெய்ம்மை பெற்று விளங்கும் வீடுபேறும்; ஏனைய வீடுபேறுகளை விடச் சிறந்ததுமாம்.

உலகாயதர் - இவர்க்குக் காட்சி ஒன்றே அளவையாகும். நிலம், நீர், தீ, வளி எனப் பூதம் நான்கே என்பர்; இவற்றது புணர்ச்சி விசேடத்தால் தோன்றி பிரிவால் மாய்வதாய உடம்பின் கண்ணே

அறிவு, மதுவின் கண் களிப்புப் போல வெளிப்பட்டு அழியும் என்றும், இறந்த உயிர் பின் பிறவாது என்றும். இன்பமும் பொருளும் ஒருவரால் செய்யப் படுவன என்றும், மகளிரிடத்துத் துய்க்கும் இன்பமன்றி வேறு விடுபேறு என ஒன்று இல்லையென்றும் இவர் கூறுவர். சௌத்திராந்திரிகர் - இவர் பௌத்தருள் ஒரு வகையினர். இவர் இவ்வுலகம் முழுவதும் அகம் புறம் என்ற இருவகைச் சமுதாயத்துள் அடங்கும் என்பர். அவற்றுள் அகச் சமுதாயம் என்பது சித்தமும் சித்தப்பகுதியுமாம். உருவம், வேதனை ஞானம், குறி, வாசனை என்னும் ஐந்து கந்தங்களும் அறுவதே விடுபேறு என்பர். உருவ கந்தம் என்பது உடல் பொறி முதலியவாம். ஞானகந்தம் என்பது இவற்றை உணரும் நுண்ணுணர்வாம். வேதனைகந்தம் என்பது இவ்வுணர்வால் தோன்றும் இன்பதுன்பங்களாம். குறிகந்தம் என்பது உலகியற் பொருள்களை ஒவ்வொன்றாகப் பகுத்து அவற்றின் பெயர் தன்மை முதலியவைகளை அறிவதாம். ஞான கந்தம் என்பது பிரவிருத்தி ஞானம், ஆலய விஞ்ஞானம் என இரு வகைப்படும். பிரவிருத்தி ஞானம் என்பது வெளிவகையில் அறியும் அறிவாம். ஆலய விஞ்ஞானமாவது மனம் ஒடுங்கிய நிலையில் அறியும் அறிவாம். வாசனை கந்தமாவது இவற்றின் வழி வரும் செயலாம். இவை ஐந்தும் முற்றும் ஒழிவதே விடுபேறு என்பர் இவர். புறச் சமுதாயமாவது வெளி நீங்கலாய ஏனைய நால்வகைப் பூதங்களும், அவற்றிற்குக் காரணமாய அணுக்களுமாம். நிகண்டவாதி - இவர் சமணர் ஆவர். பசி முதலிய பதினெட்டும் ஞானாவரணியம் முதலிய எட்டும் கந்தம முதலிய ஆறும் ஆகிய மூவகைத் தீக் குணங்களையும் உடல் வருத்தல் முதலியவற்றால் அடக்க வேண்டும். அதுபோது விடுபேறு கிட்டும் என்பர் இவர். பிரபாகரம் -நன்மையும் தீமையும் ஆகிய செயலற்ற விடத்துத் தோன்றும் உணர்வு மறைந்து நின்று மறுமையில் பயன் தரும் என்பர். உயிர் அந்நிலையில் கல்லைப் போலச் செயலற்றுக் கிடக்கும். இந்நிலையே விடுபேறு என்பர். பேதவாதிகள் - செம்பு இரத குளிகையால் அதன் களிம்பை விட்டுப் பொன்னாகி விளங்குதல் போலத் திருவருளால் ஆணவம் கெட உயிர் நிலை பேறுடையதாயும், தூயதாயும் விளங்கும். இந்நிலையே விடுபேறு என்பர். உருவசிவ சமவாதிகள் - அமிர்த பானம் முதலிய காய சித்திகளால் இறவா உடல் பெற்றிருப்பதே விடுபேறு என்பர் இவர். சாங்கியர்-தத்துவங் களின் தோற்றத்திற்குக் காரணமாய பிரகிருதி யினின்றும் வேறாகத் தன்னைக் கண்டு தாமரையில் நீர் போல் ஒன்றிலும் பற்றின்றி நிற்கும் நிலையதே விடுபேறு என்பர். பாதஞ்சலம் - உயிர் தன் அறிவு இச்சை செயல்களோடு பிரமப் பொருளில் சென்று ஒழிந்து அதனுடன்

ஒன்றுகுவதே வீடுபேறு என்பர். சித்தர் - அணிமா முதலிய எண் வகைச் சித்திகளையும் பெற்று வாழ்வதே வீடுபேறு என்பர். பாடாணவாதி - பாடாணம்-கல். உயிர் இன்ப துன்ப நுகர்வற்றுக் கல்லெனக் கிடப்பதே வீடுபேறு என்பர். இவை ஒவ்வொன்றும் உயிர் நிலையாகப் பெறும் பேரின்பத்துக்கு இணையாகாமையின் இவற்றைப் 'பழிசேர் முத்தி' என்றார்.

## உண்மை அதிகாரம்

### நுவலும் பொருள்

51. இங்கிவை பொது இயம்பும் என்பர்கள் இதன்மேல் ஆன்மாத்
தங்கிய அஞ்ச வத்தை தன்னுண்மை யுணர்த்துந் தன்மை
பொங்கொளி ஞான வாய்மை யதன்பயன் புனிதன் நாமம்
அங்குஅதில் அணைந்தோர் தன்மை அறைகுவன் அருளினாலே.

(தெ-ரை) இதுகாறும் கூறப்பட்ட ஐம்பது செய்யுட்களாலும் இறை, உயிர், தளை என்னும் முப்பொருள்களின் இலக்கணம் கூறப் பட்டது என்பர் அறிவுடையோர். இனி எஞ்சிய 50செய்யுட்களாலும் உயிரது இலக்கணம், அது பொருந்தும் உணர்வு எல்லைகளின் (ஐந்தவத்தை) இயல்பு, இறைவன் உயிர்க்குக் கலை முதலாக உள்ள தத்துவக் கூட்டை வழங்கி அதற்கு அறிவை உணர்த்தும் தன்மை, பேரொளியாய சிவஞானத்தின் உண்மை, அதன் பயன், இறைவனின் திருப்பெயராக விளங்கும் ஐந்தெழுத்தின் இயல்பு, அச்சிவபரம் பொருளொடு அணைந்தவர்களின் இயல்பு ஆகியவற்றை இறையருள் வழி நின்று இயம்புவன்.

இதுகாறும் முப்பொருள்களுக்குரிய பொது இயல்பைக் கூறினார். இனி அவற்றின் சிறப்பியல்பைக் கூறுகின்றார். அஞ்சவத்தை- ஐம்பாடு: உயிர் பெறும் உணர்வு எல்லைகள். அவை நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் என ஐவகைப்படும். தன் உண்மை-உயிரது உண்மை; அஃதாவது உயிர் மேற்கூறியவாறு ஐவகை உணர்வுகளைப் பெறுங்கால் காணும் இயல்பு. உயிர் புருவநடு முதலாக உள்ள ஐவகை இடங்களில் தங்கும் பொழுதே மேற்கூறிய ஐவகை உணர்வுகளும் நிகழ்தலின் 'தங்கிய அஞ்சவத்தை' என்றார். ஞான வாய்மை-திருவருள் முறைமை: அது பேரொளியாய் நிற்றலின் 'பொங்கொளி' என்றார். 'ஓங்கொளியாய்' என முன்னர்க் குறித்ததும் காண்க.

### உயிர் இயல்பு

52. செறிந்திடும் உடலுள் மன்னிச் சேர்புலன் வாயில் பற்றி
அறிந்துஅதில் அழுந்தும் ஒன்றும் அறிந்திடாது அறியுந் தன்மை
பிறிந்துஅடை அஞ்ச வத்தை பெருகிய மலத்தாற் பேணி
உறும்தனி அதிதம் உண்மை உயிர்க்கென வுணர்த்து மலரே

(தெ-ரை) உயிர் தான்செய்த வினைக் கீடாகப் பொருந்தும் பருவுடலில் புருவநடுவில் பொருந்தி நின்று பொறிவழிப் புலன் உணர்வு பெற்று அவற்றில் அழுந்தி நிற்கும் அவ்வாறு அழுந்தி நிற்கும் நிலையில் தன்னையும், தன்னைச் செலுத்தி நிற்கும் திருவருளையும் அறிய மாட்டாது. அவ்வாறு அறியும் தன்மையினின்றும் நீங்க வருகின்ற ஐவகை உணர்வெல்லைகளையும், மிகுந்த ஆணவ மலத்தின் செயலால் பொருந்தி இறுதியாக உயிர்ப்படங்கும நிலையையும் எய்தும். இவ்வாறு கருவிகளோடு கட்டுண்டு நிற்குப் சகலம்) நிலையையும, அவற்றின் விலகித் தனித்து நிற்கும்(கேவலம்) நிலையையும் உயிர் பெறுதல இயல்பென நூல்கள் நுவலும்.

உயிர் புருவ நடுவில் நின்று கருவிகளோடு கூடி உணரும் நிலையை நனவு நிலை என்பர். அவ்விடத்திலிருந்து கீழ்நோக்கி முறையே கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் ஆகிய நிலையைப் பொருந்தும். உயிர்ப்படங்கும்நிலை உயிர் கொப்பூழுக்குக் கீழ் இருக்கும் பகுதியில் தங்கியிருக்கும் பொழுதேயாம். இதனை மூலாதாரம் என்பர்.

### உயிர் அறியுமாறு

53. உருவுணர் விலாமை யானும் ஒரொரு புலன்க ளாக
மருவிநின்று அறித லானும் மனுதிகள் தம்மில் மன்னித்
தருபயன் நுகர்த லானும் உயிர்சட மாத லானும்
அருவினை யுடலுள் ஆவி அறிவினால் அறியு மன்றே.

(தெ-ரை) காணப்படும் பருவுடல் அறிவற்றதாதலின் அது அறியும் எனறல் சாலாது. ஒவ்வொரு புலன்களைப் பற்றி அறிவதன்றி ஒவ்வொன்றிற்கும் ஒப்ப உணரும் உணர்வு இல்லாமையானும் ஐம் பொறிகளே அறியும் என்றலும் சாலாது. மனம் முதலிய அகக் கருவிகள் பொறி வழி வரும் புலனை நுகர்வனவன்றித் தம்மையோ, தம்மைச் செலுத்தி நிற்கும் உயிரையோ அறியாவாகலின் அவை அறியும் என்றலும் சாலாது. உயிர்க்காற்று அறிவற்றதாதலின் அது

அறியும் என்றலும் சாலாது. இவ்வாற்றுன் உயிரே தான் செய்த வினைக்கீடாக இறைவனுல் வழங்கப்பட்ட உடலுள் நின்று அவன் அறிவிக்க அறியும் என்பதாம்.

உரு - உடல். உடலே அறிதற்குரியது என்பர் உடலே உயிர் (தோன்மவகாதிகள்) என்போர். கனவு, உறக்கம் முதலிய நிலைகளை எய்தும் பொழுதும், பிணமாகக் கிடக்கும் பொழுதும், அறியும் உணர்வு அதற்கு இல்லையாகலின் உடம்பே உயிர் என்றல் சாலர் தாம். ஐம்பொறிகளே அறிதற்குரிய உயிர் என்பர் பொறிகளே உயிர் (இந்திரிய ஆன்மவாதிகள்) என்போர். கண் முதலிய பொறிகள் ஒவ்வொன்றும் தத்கமக்குரிய செயலைச் செய்வதன்றி ஒன்று செய்யும் செயலைப் பிறிதொன்று செய்யாது. ஆதலின் அவற்றைக் கருவியாகக் கொண்டு உணரும் உயிர் அவற்றின் வேருனதாம்.

மருவி நின்று-பொருந்தி நின்று: பொறிகள் பூதங்களைப் பொருந்தி நின்று. மன ஆதிகள்; மனுதிகள். மனம் முதலியன: மனம், புத்தி' சித்தம், அகங்காரம் ஆகிய நான்கும் அகக்கருவிகளாம். அவையே அறியும் தன்மையது என்பர் அகக்கருவிகளே உயிர் (அந்தக்கரண ஆன்மவாதிகள்) என்போர். இக்கருவிகளும் பொறிகளைப் போன்றே ஒன்றுஅறிவதைப் பிறிதொன்று அறியாது. ஆதலின் இவற்றைக் கருவியாகக் கொண்டு உணரும் உயிர் இவற்றின் வேறும். உயிர் - உயிர்க் காற்று (பிராணவாயு). இதுவே அறிதற்குரியது என்பர் உயிர்க்காற்றே உயிர் (பிராணுன்ம வாதிகள்) என்போர். கனவு, உறக்கம் முதலிய நிலைகளில் இவ்வுயிர்க்காற்று இயங்குகிறது. எனினும் புறத்தே நிகழும் நிகழ்ச்சிகள் எதனையும் அதுபொழுது அறிய இயலுவதில்லை. ஆதலின் உயிர்க்காற்றினின்றும் உயிர்வேறும். சிவஞானபோதம் 3, 4வது நூற்பாக்களில் உயிருண்மை விளங்கக் கூறப்பட்டுள்ளது. ஆதலின் இதன் விரிவை ஆண்டுக் காண்டல்தக்கதாம்.

உயிர் அறிவுடைப் பொருள்

54. அறிவெனில் வாயில் வேண்டா அன்றெனில் அவைதாம் என்னை
அறிவதை யுதவும் என்னில் அசேதனம் அவைதாம் எல்லாம்
அறிபவன் அறியுந் தன்மை யருளுவன் என்னில் ஆன்மா
அறிவில தாகும் ஈசன் அசேதனத்து அளித்தி டானே.

(தெ-ரை) உயிர் தானுக எவற்றையும் அறியும் தன்மையது எனில் பொறிகள் வேண்டுவதின்று. உயிர் என்றும் அறியும் தன்மை அற்றது எனில் அத்தன்மைத்தான உயிர்க்குப் பொறிகள் எற்றுக்கு?

என்ற வினா எழும். அவை உயிர்க்கு அறிவைக் கொடுப்பதற்காம் எனில் அப்பொறிகள் அறிவற்றனவாக அவை அறிவு தருமெனல் எங்ஙனம் பொருந்தும்? எவற்றையும் காணுகவும் முழுமையாகவும் அறிகின்ற இறைவனே உயிர்க்கு அறியும் தன்மையினைக் கொடுப்பன் என்னில், உயிர், இயற்கையில் அறிவில்லாத பொருள் எனப்படும்: அங்ஙனமான இறைவனும் அவ்வாறு அறிவற்ற பொருளுக்கு அறிவைக் கொடான். இவ்வாறாகவே உயிர் இயற்கையில் அறிவுடைப் பொருளாம் என்பது உணரத்தக்கது.

உயிர் தானே அறியும், அதற்கொரு முதல்வன் அறிவிக்க வேண்டுவதில்லை என்பா சிவசமவாத சைவர். உயிர் அறிவுடைப் பொருள் என்று என்பர் நியாய வைசேடிகர். பொறிகளே உயிர்க்கு அறிவை நல்கும் எனபர் சிவசங்கிராந்த வாதிகள். உயிர்க்கு அறியும் தன்மையை இறைவனே கொடுப்பன் என்பா பரிணாம வாதிகள்; இந்நால் வகையரையும் மறுத்தே உயிர் இயற்கையில் அறிவுடைப் பொருளாம் எனக் கூறினர். வாயில-புலனை நுகர்தற்குக் கருவியாகும் பொறிகள். அசேதனம்-அறிவற்றது.

உயிர்குறித்துணரும் பொருளெல்லாம் அழிதற்குரியது

55. அறிவினால் அறிந்த யாவும் அசத்தா நல்அறிதி என்றும்
அறிவினால் அறியொ ணாதேல் ஆவதொலறின்மை தொன்மை
அறிவுதான் ஒன்றை முந்தி யதுவது வாகக் காணும்
அறிவுகாண் அசத்து மற்றுஅது அறிவினுக்கு அறியொ ணாதே.

(தெ-ரை) உயிர் தன் அறிவினால் பொறிவழி அறிந்தயாவும் நிலையில் பொருளென அறிக. என்றுமுன்றும் உயிர் அறிவால் சிவபரம்பொருள் அறியப் படாத தொன்றாயின் அப்பரம் பொருளால் உயிர்க்கு விளையததக்க பயன் ஒன்றும் இல்லையாம். உயிர்க்கு உளதாய இயற்கை அறிவு என்பது பொறிவழி நின்று உணரும் பொருள்களில் அதுவதுவாக நின்று அழுந்தி நிற்கும் அறிவேயாம். ஈண்டு அவ்வறிவாலறிந்த பொருளே நிலையில் பொருளாம் எவற்றிற்கும் மேலாக விளங்கும் சிவபரம் பொருள் அத்தகைய அறிவினால் குறித்துணர இயலாததாம்.

உயிர் தன்னாலறிவது (பசுஞானம்), பொறி வழி அறிவது (பாசஞானம்), இறைவழி யறிவது (பதிஞானம்) என மூவகைப் படும். அவற்றுள் முன்னைய இரண்டாலும் அறியும் பொருள்கள்

நிலையில் பொருள்களாம். பின்னையதொன்றுன் அறியும் பொருளே நிலையுடைய பொருளாம். பொறிவழி உணரும் அறிவைச் சுட்டறிவு என்றும், பாசஞானம் என்றும் கூறுவர். ஈண்டு அசத்து என்றது உடல், கருவி, உலகு, நுகர்வுகளையாம். எஞ்ஞான்றும் நிலையுடைய பரம் பொருளாலேயே நிலையான மெய்ப் பொருளை உணர இயலும். திருவள்ளுவர் உள்ளது என்றும் மெய்ப்பொருள் என்றும் செம்பொருள் என்றும் கூறுவனவும் ஈண்டு நினைவு கூரத் தக்கன. முந்தி-முற்படப் பொருந்தி: அஃதாவது யாதானும் ஒரு பொறியைப் பொருந்தி. அதுவதுவாதல் - பொறிவழிக்கண்ட பொருள் எதுவோ அதன் வயப்பட்டு நிற்றல்; இறைவனும் பொறிவழி அறியப்படும் பொருளேயாம் என்பர் நையாயிகர். அவரை மறுக்குமுகமாக எழுந்ததே இப் பாடலாம்.

உயிர்க்கு உளதாய வாய்ப்பு

56. எவ்வறிவு அசத்துஅ றிந்தது எனில்உயிர் அறியாது ஈசன்
அவ்வறிவு அறியான் அல்லது அசேதனம் அறியாது ஆவி
செவ்விய கருவி கூடில் தெரிவுறாது அருளிற் சேராது
உவ்விரு வகையது என்னில் ஒளியிருள் ஒருங்கு றாவே.

(தெ - ரை) எந்த அறிவு நிலையில் பொருளை நிலையில் பொருளென்று அறிந்தது? எனில், ஒன்றை அறிவித்தாலன்றி அறிய இயலாத உயிர் தானாக நிலையில் பொருளின் இயல்பை அறியாது. விளங்கிய அறிவினனாகிய இறைவனும் அந்நிலையில் பொருள்களை ஒக்க அறிவதன்றி ஒவ்வொன்றாகக் குறித்தறியான். இவ்விரண்டும் அல்லாத உயிர்க்குற்ற கட்டாகிய பாசமும் அறிவற்றதாதலின் அதுவும் அறியாது. உயிரும் உணர்தற்குரிய கருவியாகிய பொருள்களும் தனித்தனியே அறிய இயலாதாயினும் இரண்டும் கூடியவழி அறியுமெனில் தானாக அறிய இயலாத உயிரும், அறிவற்றதும் நிலையற்றதுமாகிய கருவிகளும் கூடின் எங்ஙனம் அறியும் என்னும் வினாவெழுந்து அவையும் அறியமாட்டா எனத் தகும். உயிர் அருளொடு கூடி அறியுமெனில் கட்டு நிலையில் அவ்வாறு கூடுதல் ஆகாது, அவ்வாற்றான் உயிரும் அறிய இயலாது. அருளும் கருவிகளும் கூடி அறியுமெனில் அவை இரண்டும் ஒளியும் இருளும் போல் தம்முள் மறுதலையாக நிற்றலின் ஓரிடத்தில் கூடி நில்லா. இவ்வாற்றான் உயிரே கருவியொடு கூடி நின்று நிலையில் பொருள்களையும், இறையொடு கூடி நின்று நிலையுடைய பொருளையும் அறியத்தகும் உரிமை உடையது என அறியலாம்.

நிலையில் பொருளை உயிர் அறியும் என்பர் ஈஸ்வர அவிகார வாதிகள், சிவசமவாதசைவர், ஐக்கியவாதசைவர் முதலியோர். ஈசன் அறிவன் என்பர் சிவாத்துவித சைவர். பொறிகள் அறியும் என்பர் சிவசமவாதிகள். உயிரும் கருவிகளும் கூடி அறியும் என்பர் சங்கிராந்தவாதிகள் அருளும் கருவிகளும் கூடி அறியும் என்பர் ஐக்கியவாதிகள். இவ்வனைவரையும் மறுத்துக் கூறுவதே இப் பாடலாகும்.

உவ்விரு வகையது - மேற்கூறிய அருளும் கருவிகளும் கூடி அறிவது

இதுவுமது

57. சத்துஇது என்று அசத்துத் தான்அறி யாது அசத்தைச்
சத்து அறிந்து அகல வேண்டா அசத்துஇது சத்துஇது என்றோர்
சத்து இருள் ஒளிய லாக்கண் தன்மைய தாம் அசத்தைச்
சத்துடன் நின்று நீக்கும் தன்மையால் சதசத் தாமே.

(தெ-ரை) நிலையில் பொருளாகிய தனை அறிவின்மையால் நிலையுடைய பொருளாய சிவபரம்பொருளை இது நிலையுடைய பொருள் என்று அறிய மாட்டாது. நிலையுடைய பொருளாகிய சிவபரம் பொருளும் எங்கும் எக்காலத்தும் ஒப்ப அறியும் அறிவுடையதாதலால் அறிவற்றதாகிய தனையை ஒவ்வொன்றாகப் பகுத்தறிந்து நீங்க வேண்டிய நிலையற்றதாகும். ஆதலின் நிலையில் பொருள் இதுவென்றும் நிலையுடைய பொருள் இதுவென்றும் அறிதற்குரிய உயிர், இருளோடு பொருந்தி இருளாகாதும் ஒளியோடுகூடி ஒளியாகாதும் இவ்விரண்டின் வேறாய் நிற்கும் கண்ணின் தன்மையை ஒத்ததாம். அந்நிலையில் நிலையில பொருளாய தனையை நிலையுடைய பொருளாகிய சிவபரம பொருளோடு பொருந்தி நின்று நீக்கும் இயல்பால் உயிர் சதசத்து எனப்படும்.

சத்து - நிலையுடைய பொருள்: சிவபரம்பொருள். அசத்து- நிலையற்ற பொருள்: தனை.

'யாவையும் சூனியம் சத்தெதிர் ஆதலின்
சத்தே அறியாது அசத்துஇலது அறியாது
இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா'

என்னும் சிவஞான போதமும்.

# திருவிளையாடல் புராணம்

உரைநடை

நக்கீரன் இறைவன்மீது பிரபந்தம் பாடி வணங்குதல்

நக்கீரன், கைதந்து கரையேற்றிய கருணைக் கடலாகிய சோம சுந்தரக் கடவுளையும், மீனாட்சியம்மையாரையும் வணங்கித் தீமை செய்தோர்க்குக் கோபமும், நன்மை செய்தோர்க்கு அருளும் செய்த மையைப் [1]பொருளாகச் செய்யுளில் அமைத்துப் பாடுவானாயினன்:

[2]அறனிலான் இழைத்த வேள்வி அழித்தபே ராண்மைபோற்றி!
மறனிலாச் சண்டிக்(கு) ஈந்த மாண்பெருங் கருணை போற்றி!
கறுவிவீழ் கூற்றைக் காய்ந்த கனைகழற் கமலம் போற்றி!
சிறுவனுக்(கு) அழியா வாழ்நாள் அளித்தருள் செய்தி போற்றி!
[3]சலந்திரன் உடலங் கீண்ட சக்கரப் படையாய் போற்றி!
வலந்தரும் அதனை மாயோன் வழிபடக் கொடுத்தாய் போற்றி!

---

1. இங்கே, ''சிறியோன் சொன்ன அறிவில்வாசகம், வறிதெனக் கொள்ளா யாகல் வேண்டும், வெறிகமழ் கொன்றையொடு வெண்ணில(வு) அணிந்து, கீதம் பாடிய அண்ணல். பாதஞ் சென்னியுட் பரவுவன் பணிந்தே'' (11-ஆம் திருமுறை நக்கீரர் - திருவெழுகூற்றிருக்கை) எனவும், ''டணிந்தேன்நின் பாதம் பரமேட்டீ! பால்நீ[று] அணிந்[து] ஆல வாயில் அமர்ந்தாய்!- தணிந்தென்மேல், மெய்யெரிவு தீரப் பணித்தருளும் வேதியனே!, ஐயுறவொன்[று] இன்றி அமர்ந்து'' [11-ஆம் திருமுறை நக்கீரர்- திருவெழுகூற்றிருக்கை இறுதி வெண்பா] எனவும், ''விரைந்தேன்மற்[று] எம்பெருமான்! வேண்டியது வேண்டா[து], இகழ்ந்தேன் பிழைத்தேன் அடியேன்-விரைந்தெனைமேற், சீற்றத்தைத் தீர்த்தருளும தேவாதி தேவனே!, ஆற்றவும்நீ செய்யும் அருள்'' [11-ஆம் திருமுறை நக்கீரர் - பெருந்தேவபாணி - இறுதி வெண்பா] எனவும் வருபவை சிந்திக்கற்பாலன.

2. அறனிலான்-தக்கன்: சண்டி - சண்டேசுர நாயனார்: கறுவி-கோபித்து, சிறுவன் - மார்க்கண்டேயன்.

3. சலந்திரன்-ஒரு அசுரன்: கமலப்புத்தேள்-பிரமதேவன். நடுச்சிரம் - [ஐந்து சிரங்களில்] நடு நிற்கும் தலை. சிலந்தியை - சிலந்திக்கு இங்குக் கோச்செங்கட் சோழனுக்கு.

அலர்ந்தசெங் கமலப்புத்தேள் நடுச்சிரம் அரிந்தாய்போற்றி!
சிலந்தியை மதுடஞ் சூட்டி அரசருள் செல்வம் போற்றி!

[1] திரிபுரம் எரிய நக்க சேவகம் போற்றி! மூவர்க்[கு]
அருளிய நிலைமை போற்றி! அனங்கனை ஆகந் தீய
எரியிடு நயனம் போற்றி! இரதிவந்[து] இரப்ப மீளக்
கரியவன் மகனுக்[கு] ஆவி உதவிய கருணை போற்றி!

[2] நகைத்[து] அடவந்த அந்த நகுசிரந் திருகி வாங்கிச்
சிகைத்திரு முடிமேல் வைத்த திண்டிறல் போற்றி! கோயில்
அகத்[து] அவி சுடரைத் தூண்டும் எலிக்கர[சு] ஆள மூன்று
சகத்தையும் அளித்த தேவர் தம்பிரான் சரணம் போற்றி!

[3] பொருப்பகழ்ந்[து] எடுத்தோன் சென்னி புயமிற மிதித்தாய்
போற்றி!
இருக்கிசைத்[து] அவனைபாட இரங்கிவாள் கொடுத்தாய்
போற்றி!
தருக்கொடும் இருவர் தேடத் தழற்பிழம் பானாய் போற்றி!
செருக்குவிட்டு அவரே பூசை செய்யநேர் நின்றாய் போற்றி!

[4] பருங்கைமால் யானை ஏனம் பாய்புலி அரிமான் மீனம்
இருங்குறள் யாமை கொண்ட இகல்வலி கடந்தாய் போற்றி!

---

1. நக்க-சிரித்த. சேவகம்-வீரம். மூவர்-தாரகாட்சன், கமலாட்சன், வித்துன்மாலி என்னும் மூன்று அசுரர். அனங்கன்-மன்மதன். கரியவன்-திருமால். கரியவன்மகன்-மன்மதன்.

2. அட-கொல்லுதற்கு. நகுசிரம்-வெண்டலை. கோயில்-இந்துத் திருமறைக்காடு என்னும் தலம். எலிக்கு-எலியிறுக்கு; இங்கு மாவலிச் சக்கரவர்த்திக்கு.

3. பொருப்பு அகழ்ந்து எடுத்தோன்-இராவணன். அவனே-அவ் விராவணனை. இருவர் - பிரம விஷ்ணுக்கள் அவரே - அப்பிரம விஷ்ணுக்களை. நேர் நின்றாய்-நேரில் நின்றருளியவனே.

4. ஏனம்-பன்றி. ஏனம் அரிமான் மீன் குறள் ஆமை-இவை திருமால் கொண்ட வராகாவதாரம், நரசிம்மாவதாரம். மச்சாவதாரம், வாமனாவதாரம், கூர்மாவதாரங்களைக் குறிக்கும்; இவை இவ்வவதாரங்கள் எடுத்து இறைவனைப் பூசித்தன. அலவன்-நண்டு. தேரைதவளை. கழுகின்-கழுகுமாகிய இவற்றின்.

குரங்குபாம்[பு] எறும்பு நாரை கோழிஆன் அலவன் தேரை
கருங்குரீஇ கழுகின் அன்புக்[கு] இரங்கிய கருணைபோற்றி!

[1]சாலநான் இழைத்த தீங்குக்[கு] என்னையும் தண்டஞ் செய்த
கோலமே! போற்றி! பொல்லாக் கொடியனேன் தொடுத்த
புன்சொல்
மாலைகேட்[டு] என்னை ஆண்ட மலைமகள் மணாள! போற்றி!
ஆலவாய் அடிகள் போற்றி! அம்மைநின் அடிகள் போற்றி!
ஐயோ! வருந்தினேன்; அடியேனுக்கு அருள்புரிக! அருள்புரிக!''

என்று வேண்டி, இறைவனுடைய கோபமும் பிரசாதமும் [அருளும்] குறித்துக் [2]'கோபப் பிரசாதம்' என்னும் பாமாலையால் சோமசுந்தரக் கடவுளையும் மீனாட்சியம்மையாரையும் முறையாகப் போற்றி என்று துதித்தான். பின்பு சிவபெருமானைப் [3]பெருந்தேவபாணி, [4]திருவெழு கூற்றிருக்கை என்னும் பாமாலைகளால் போற்றிப் பன்முறை வீழ்ந்து வணங்கி எழுந்தான். ஏனைய புலவர்களும் தனித்தனியே துதித்து வணங்கினர்.

### தருமி பொற்கிழி பெறுதலும் புலவர்கள் வாழ்தலும்

சோமசுந்தரக் கடவுள், தம்மைத் துதித்த நக்கீரனுக்குத் திருவருள் சுரந்து, ''நீ முன்போலவே நின்னை நன்கு மதித்த புலவர்

---

1. சால-மிகவும். புன்சொல்மாலை-இங்குக் கைலை பாதி காளத்தி பாதி யந்தாதி என்னும் பாமாலை.

2. கோபப்பிரசாதம்-இது, ''தவறு பெரிதுடைத்தே! தவறு பெரிதுடைத்தே!'' என்று தொடங்கும் ஒரு பிரபந்தம்; இணைக் குறளாசிரியப் பாவால் அமைந்தது.

3. தேவபாணி-தெய்வத்தைப் பாடும் பாட்டு. இது முழு முதற் கடவுளைப் பற்றியது ஆதலின்,பெருந்தேவபாணி எனப்பட்டது; இது, ''சூல பாணியை'' என்று தொடங்கும் இணைக்குறளாசிரியப்பாவால் அமைந்தது

4. திருவெழு கூற்றிருக்கை-இஃது ஒன்று முதல் ஏழுவரையுள்ள எண்களை அமைத்துப்பாடும் ஒரு வகைச் சித்திரப் பாட்டு; இணைக்குறளாசிரியப்பாவால் அமைந்துள்ளது.

நக்கீரர் பாடிய கைலை பாதி காளத்தி பாதி யந்தாதி, கோபப் பிரசாதம், பெருதேவபாணி, திருவெழுகூற்றிருக்கை என்னும் நான்கு பிரபந்தங்களும் பதினோராம் திருமுறையில் அடங்கியவை: பிறவும் உள; ஆண்டுக் காண்க.

கூட்டத்தில் இருக்கக் கடவாய்'' என்று அருளி மீனாட்சியம்மை யோடும் மறைந்து திருக்கோயிலினுள் வீற்றிருந்தார். நக்கீரனும் மற்றைப் புலவர்களும் சங்க மண்டபத்தின் முன் தூக்கிய [1] பொற்கிழியை அறுத்துத் தருமி என்னும் ஆதிசைவ அந்தணனுக்குக் கொடுத்தனர்; மற்றும் பாண்டியனைக் கொண்டும் சில வரிசைகள் கொடுப்பித்துக் கல்விச் செல்வர்களாய் வாழ்ந்து வந்தனர்.

சண்பக பாண்டியன் பல திருப்பணிகள் செய்தல்

சண்பகபாண்டியன் நாடோறும் திருவாலவாயினில் வீற்றிருக்கும் சோமசுந்தரக் கடவுளையும் அங்கயற்கண் அம்மையையும் சென்று தரிசித்து வணங்கிச் சிவமே பொருள் எனத் துணிந்து உள்ளன்பினோடு பல திருப்பணிகளை நடாத்திக் கொண்டு இனிது வாழ்ந்து வந்தான்

செய்யுள்—27
ஆகச் செய்யுள்—2566



## 54. கீரனுக்கு இலக்கணமுபதேசித்த படலம்

நக்கீரன் சிவ வழிபாடு புரிதல்

நான்மாடக் கூடலின் கண் எழுந்தருளிய முழுமுதற் கடவுளாகிய சோமசுந்தரக் கடவுளின் ஆஞ்ஞையினாலே சங்கப் புலவர் கூட்டத்தை அடைந்து அங்கு உறையும் நக்கீரன், அழுக்காறு நீங்கி, ஆலவாய் அண்ணல் திருவடிகளிலே அன்புகொண்ட மனத்தினனாய், "சிவபெருமானது நெற்றிக் கண்ணினால் எரிந்த மன்மதன், பிரமனாலும் திருமாலினாலும் காக்கப்பட்டவனல்லன்; அவ்வக்கினிக் கண்ணில் உண்டாகிய அனல் நம்மைச் சுட்டபோது அவ்வெப்பத்தை தீர்த்து,பொற்

1. இங்குத் தருமி பொற்கிழி பெற்றதை. ''நற்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி நற்கனகக் கிழிதருமிக் கருளினோன் காண்'' [திருநாவுக்கரசர் தேவாரம் - திருப்பத்தூர்] எனவும், ''பொதியப் பொருப்பன் மதியக் கருத்தினைக், கொங்குதேர் வாழ்க்கைச் செந்தமிழ் கூறிப், பொற்குவை தருமிக்(கு) அற்புடன் உதவி, என்னுளங் குடிகொண்(டு) இரும்பயன் அளிக்கும், கள்ளவிழ் குழல்சேர் கருணையெம் பெருமான்'' [கல்லாடம்] எனவும் வருவனவற்றால் அறியலாம். ஆவணித் திருவிழா நாளாம் திருநாளில் இக் கிழியறுத்தல் ஐதீகம் நடைபெறுகிறது.

ருமரைப் பொய்கையே காத்தது. ஆதலால்,இதுவே எம்மை எப்பிறப்பிலும் காப்பதாகும்'' என்று சிந்தித்து,நாடோறும்ஒன்றுபட்ட மனத்துடன் முக்காலத்தினும் அதில் நீராடிச் சோமசுந்தரக்கடவுளைவழிபட நியமம் பூண்டு வந்தான்.

இறைவன் நக்கீரனுக்கு அருள்புரியச் சிந்தித்தல்

மதுரை நாயகனுகிய சோமசுந்தரக்கடவுள்தம்மை நக்கீரன் வந்து வழிபடும் நியமத்தை நோக்கித் திருவுள மகிழ்ந்து, ''இலக்கணம் இவனுக்கு இன்னும் விளங்கவில்லை. அதனுலே இவன், இதுவழாநிலைச் சொல், இது வழுஉச் சொல் என்பதை அறிந்திலன். இவனுக்கு இலக்கணம்குற்றமற்ற நூற் கேள்வியின் புலமை பொருந்திய யாவரைக் கொண்டு போதிப்பிக்கலாம்'' என்று சிந்திக்கலானுர்.

உமாதேவி இறைவனிடம் அகத்தியரைப்பற்றி அறிவித்தல்

அப்பொழுது உமாதேவியார் இறைவனைச் செங்கை கூப்பி வணங்கி நின்று, ''எம்பெருமானே! உள்ளங்கை நெல்லிக்கனி போல யாவற்றையும் உணர்ந்த புங்கவனே! தங்கள் நினைவுக்குத் தக்கவிடை கூற வல்லவர் யாவர் உளர்? எனினும் அடியாள் உள்ளத்தில் தோன்றிய தொன்றைக் கூறுகின்றேன்; ஐயனே! முன்னொரு நாள் கயிலாய மலையிலே தங்கள் திரு முன் திருமால் பிரமன் இந்திரன் முதலான தேவர்களும், சனகன் முதலான முனிவர்களும், பிறரும் கூடியிருந்தனர். அதனுல் இப்பூமி பொறுக்கலாற்ருது வடகிழக்கெல்லை தாழ்ந்தது தென்மேற்கெல்லை உயர்ந்தது; அதனைக் கண்டு தேவர்கள் தேவரீரைச் சூழ்ந்து வணங்கி நின்று, ''எம் ஐயனே! தங்களைப்போன்ற ஒருவரை அத்தென்மேற்கெல்லையில் இருக்கவிடுத்தால்,இப் பூமி சமமாய்நிற்கும் என்று வேண்டினர். உடனே தாங்கள் ''நம்மை யொப்பவன் கடலைக் குடித்த அகத்திய முனிவனே; நமது பார்வதியை யொப்பவள், அம் முனிவனின் இல்வாழ்க்கைக்கு உரியவளாகிய உலோபா முத்திரையே'' என்று திருவாய்மலர்ந்து, அத் திருமுனியை அங்குப் போகுமாறு பணித்தருளினீர். அம் முனிவன் விடை பெற்றுப் போகும் பொழுது தங்களை நோக்கி, ''அடியேன் செல்லும் நாடு தமிழ் நாடு என்பர்; அந் நாட்டு மக்களெல்லாம் இனிய தமிழை ஆராய்ந்து நூற் கேள்வியில் வல்லவர் என்பர்; அங்கே தமிழ் நூலில் வினுவினுர்க்குத் தக்க விடையளித்தல் வேண்டும்; ஆதலால், இறைவனே! அடியேனுக்குச் செந்தமிழ் இலக்கண நூலை அருளிச் செய்வாயாக'' என்றுவேண்டினன் அவ்வாறே தாங்கள் அம் முனிவன் தெளியுமாறு முதனூலை அருளிச்

செய்நீர்! அவன் அம் முதல் நூலைத் தெளிந்த பின்னும், ''நித்தனே அடியேன் நினது திரு வடியை எப்போது தரிசிப்பேன்'' என்றான்.; தாங்கள், ''கடம்ப வனத்திலே நம்மைத் தரிசித்து வணங்கி, நின். மனம் விரும்பியவற்றையெல்லாம் பெற்றுக்கொண்டு பொதியமலையிலே சென்று இருக்கக் கடவை'' என்று விடுத்தருளினீர். அவனும் அப்படியே அங்குப் போய், உலோபா முத்திரையோடு இருக்கின்றான்: இது தங்கள் திருவுளத்துக்குப் பொருந்துவ தாயின் அவ்வகத்தியனைக் கொண்டு இந் நக்கீரனுக்குத் தமிழ் இலக்கணத்தை உணர்த்துவித்தருளும்'' என்று விண்ணப்பஞ் செய்தார்.

சிவபெருமான் அதனைக் கேட்டு மகிழ்ந்து, ''பெண்ணே! நீ இத் துணைநாட் செய்திகள் அனைத்தையும் மறந்திடாது இன்று கூறினை; அதனையே செய்வேம்'' என்று அகத்திய முனிவனை நினைந்தருளினார்.

அகத்திய முனிவர் சோமசுந்தரக் கடவுளை வந்து தரிசித்தல்

எல்லாம் வல்ல இறைவனின் திருவுள்ளக் குறிப்பினை உணர்ந்த அகத்திய முனிவர், தம் முடிமீது அஞ்சலியாகக் கைகளைக் குவித்து அரிய தவமாகிய விமானத்தில் உலோபா முத்திரையோடு ஏறிப் புறப்பட்டு வான வழியே வந்து மதுரையை அடைந்தார். பின்பு பெரிய தவமாகிய தேரினின்றும் மனைவியோடும் அவர் இறங்கித் திருக்கோயிலுட் புகுந்து செம்பவள மலைபோன்ற சோமசுந்தரக் கடவுளையும், இந்திர நீல மலை போன்ற மீனாட்சியம்மையாரையும் வணங்கிச் சுரந்து பெருகும் அன்பு உள்ளம் நிறைந்து ததும்ப, சிவானந்தம் பெருக அருகிலே இருந்தார்.

இறைவன் அகத்தியரிடம் கீரனுக்குப் போதிக்கக் கூறல்

அப்பொழுது நக்கீரன் பழுக்கப்போலப் பொற்றாமரைப் பொய்கையில் நீராடி, இறைவனைத் தரிசிக்கும் பொருட்டு அங்கு விரைந்து வந்து சேர்ந்தனன். அந்நிலையிலே ஆலவாய் அண்ணல் அகத்திய முனிவனைத் தம் திருமுன் வருமாறு கடைக்கண் சாத்தி, ''அருந்தவச் செல்வ! இந் நக்கீரனுக்குத் தமிழ் இலக்கணம் நிரம்பிற்றிலது; நீ நம்மிடத்தில் கேட்டுத் தெரிந்தவாறே அவ்விலக்கணத்தைக் குற்றமற இவனுக்குக் கற்பிக்கக் கடவாய்'' என்று பணித்தருளினார்.

### அகத்தியமுனிவர் நக்கீரனுக்கு இலக்கணம் போதித்தல்

பிணியும் மருந்துமாகிய சோமசுந்தரக் கடவுளின் ஆணையைச் சிரத்தினும் மனத்தினும் தாங்கிய அகத்திய முனிவர், தம்மைவணங்கி நின்ற நக்கீரனுக்கு மன மயக்கம் நீங்க இலக்கணத்தை அறிவுறுத்தினர்

பொதுப்பாயிரம் சிறப்புப்பாயிரங்களையும், உடன்படல் முதலிய எழுவகை மதங்களையும், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால் வகைப் பயன்களையும், குன்றக் கூறல் முதலிய பத்துக் குற்றங்களையும், சுருங்கச் சொல்லல் முதலிய பத்து அழகுகளையும், நுதலிப் புகுதல் முதலிய முப்பத்திரண்டு உத்திகளையும், முதனூலினைத் தொகை வகை விரி என்னும் முறையினல் காண்டிகையுரை விருத்தியுரைகளையும் ஐயந் திரிபறப் போதித்தார்.

### இறைவன் அகத்தியரைத் தழுவி வரமளித்து அனுப்புதல்

அப் போதனு சக்தியைக் கண்டு அந் நூலின் பொருளே திருவுருவ மாகிய முதற் குரவனும் சோமசுந்தரக் கடவுள், களிப்பும் இன்பமும் அருளும் பெருக அவ் வகத்திய முனிவனை அவன் மகிழ்ச்சிக் கடலினுள் திளைக்கத் தமது திருக்கரங்களால் தடவி, வேண்டிய வரங்களெல்லாம் நிரம்பக் கொடுத்தருளி, இருக்கைக்குச் செல்ல விடுத்தருளினர்.

### இறைவன் உமாதேவியாரின் ஐயப்பாட்டை விளக்குதல்

உலோபா முத்திரையோடும் அகத்திய முனிவர் விடை பெற்றுப் போனபின, உமாதேவியார் சோமசுந்தரக் கடவுளை நோக்கி, ''இந் நக்கீரனுக்குத் தாங்கள் இலக்கணம் கற்பித்தருளாது இவ்வகத்திய முனிவனைக்கொண்டு கற்பித்தருளிய காரணம் என்னை?'' என்று வினவ மதுரை நாயகனும், ''தம்மை நாடோறும் வழிபடுவோரும், தமக்கு நிறையப் பொருள் கொடுப்போரும், தம்மிடத்தே பொறுமையில்லாத மனத்தூய்மையுடையோரும், தமது சொல்லைக் கடவாதவருமாகிய குற்றமற்ற உள்ளத்தினர்க்கே நூல் கற்பித்தல் தருமம்'' என்று அறிவு டையோர் கூறுவர்.

தன்னை நித்தலும் வழிபடுந் தகுதியோர் சாலப்
பொன்ன ளிப்பவர் தொடுத்தமற் சரமிலாப் புனிதர்
சொன்ன சொற்கட வாதவர் துகடவிர் நெஞ்சத்(து)
இன்ன வர்க்குநூல் கொளுத்துவ(து) அறன்என இசைப்ப;

நக்கீரன் நம்மிடத்தே பொறாமை கொண்டதனால் நாம் அறிவு றுத்தாமல் அவ்வகத்தியனைக் கொண்டு அறிவித்தோம்'' என்று கூறி யருளினார். அதனைக் கேட்டு அம்மையார் ஐயமொழிந்து மனமகிழ்ச்சி கொண்டு இருந்தார்.

நக்கீரன் வருத்தமும் மகிழ்ச்சியும் கொள்ளுதல்

அகத்திய முனிவரிடத்தே இலக்கணம் கற்ற நக்கீரன் பின்னர்த் தான் முன்னே செய்த செய்யுட்கள் அனைத்தையும் ஆராய்ந்து வழூஉச் சொல்லும் வழாநிலை முடிபும் உற்று நோக்கி, ''நான் அறியாமையி னாலே, முற்றும் ஒருங்கு உணர்ந்த இறைவன் கூறியருளிய பாடலிலே பொருட் குற்றஞ் சொன்னேனே! மறைமுடியும் தீண்டுதற்கரிய திருவ டிகளை நிலமகள் தீண்டும் வண்ணம் எழுந்தருளி வந்த பரஞ்சோதியா கிய கூத்தப்பிரானுக்குப் பிழை செய்தேனே! 'அற்ப வித்தையுடையோர் மிகவும் இறுமாப்புடையோர்' என்னும் பழமொழி என் அளவினதா யிற்றே. [1] அட்டமூர்த்தியாகிய இறைவன் திருவடிகட்கு அடியேன் செய்ய நேர்ந்த தீங்கினால் அடியேனை அவ்விறைவனது நெற்றிக் கண் ணில் உண்டாகிய அக்கினி சுட்டதன்றி அடியேனுடைய நெஞ்சமும் சுடுகின்றதே!''[2] என்று நினைந்து நினைந்து உள்ளே நிரம்பித் ததும்பும் துன்ப நோய் என்னும் கடலுள் ஆழ்ந்தான். ''குழந்தையைப் பெற்ற தாய் கசக்கும் மருந்தினை அதன் வாயிலே ஊட்டித் தீய பிணியை நீக்கும் தன்மை போல அடியேனைத் தண்டித்து அறிவுறுத்திய அப்பெருங் கருணைப் பெருமானுக்கு ஏழையேன் செய்யத் தகுவது யாது?''[3] என்று எல்லையில்லாத மகிழ்ச்சிக்கடலுள் ஆழ்ந்தான்.

---

1. அட்டமூர்த்தி-நிலம், நீர், தீ, வளி வான், ஞாயிறு, சந்திரன் உயிர் என்னும் எட்டு வடிவாகிய இறைவன். இதனை, ''இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமான னாயெறியுங் காற்றுமாகி, அருநிலைய திங்க ளாய் ஞாயிறாகி ஆகாய மாயட்ட மூர்த்தி யாகி'' என வரும் அப்பர் திருத்தாண்டக அடிகளால் அறியலாம்.

2. இங்கே, ''தன்னெஞ்(சு) அறிவது பொய்யற்க; பொய்த்தபின் தன்னெஞ்சே தன்னைச் சுடும்''என வரும் திருக்குறள் சிந்திக்கற்பாலது.

3. இங்கே, ''கோகழியெங் கோமாற்கு நெஞ்சமே உண்டாமோ, கைம்மா றுரை'' (திருவாசகம் - பண்டாய நான்மறை) என வரும் அடிகள் உன்னற்பாலன.

## ஸ்ரீ காசிமடத்தின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| திருவருட்பயன் | (விளக்க உரையுடன்) | விலை ரூ. 1-50 |
| நீதிநெறிவிளக்கம் | ,, | விலை ரூ. 1-50 |
| உண்மைநெறி விளக்கம் | ,, | விலை ரூ. 0-75 |
| கந்தர்கலி வெண்பா | ,, | விலை ரூ. 1-50 |
| உண்மை விளக்கம் | ,, | விலை ரூ. 1-00 |
| திருவுந்தியார் | ,, | விலை ரூ. 1-25 |
| கொடிக்கவியும் வினாவெண்பாவும் | ,, | விலை ரூ. 0-75 |
| திருக்களிற்றுப்படியார் | ,, | விலை ரூ. 1-25 |
| இருபா இருபஃது | ,, | விலை ரூ. 1-25 |
| போற்றிப் பஃறொடை | ,, | விலை ரூ, 1-25 |
| நெஞ்சுவிடு தூது | ,, | விலை ரூ. 1-50 |
| திருக்குறள் ஒரு பொதுமறை | | விலை ரூ. 3-00 |
| மீனாட்சியம்மை பிள்ளைதமிழ்-கருத்தரங்கக் கட்டுரைகள் | | விலை ரூ. 3-00 |
| திருவாசகம்-ஆங்கில மொழிபெயர்ப்பு (கோ. வன்மீகநாதன்) | | விலை ரூ. 15-00 |
| திருவருட்பயன்-நிரம்ப அழகிய தேசிகர் உரையுடன் | | ரூ. 5-00 |
| அபிராமி அந்தாதி தெளிவுரையுடன் | | விலை ரூ. 1-00 |
| திருவிளையாடற்புராணம் | (உரைநடை மதுரைகாண்டம்) | விலை ரூ. 4-00 |
| திருவிளையாடற்புராணம் | (உரைநடை கூடற்காண்டம்) | விலை ரூ. 3-50 |
| திருமுறைகண்ட புராணம் சேக்கிழார் புராணம் | | விலை ரூ. 0-75 |
| திருத்தொண்டர் புராணம் | ( மூலம் ) | விலை ரூ. 12-00 |
| திருத்தொண்டர்புராணம் | (உரைநடை) | 12-00 |
| Peeps in to the Cultural Heritage of Hinduism (M ARUNACHALAM.) | | விலை ரூ, 25-00 |
| கந்தபுராணம் மூலம் 2ம் பகுதி | (பழையபதிப்பு) | விலை ரூ. 4-00 |

விற்பனையாளர்களுக்கு 20% கழிவு உண்டு

ரூ. 1000 க்கு மேற்பட்ட ஆர்டர்களுக்கு அனுப்புகைச் செலவு இலவசம்

முகவரி:- மேலாளர்:

ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் 612504.

(தஞ்சை மாவட்டம்)

ஸ்ரீ காசிமடத்திற்காக வெளியிட்டவரும் ஆசிரியரும் ம. வே. பசுபதி.
திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் ஸ்ரீ குமரகுருபரர் அச்சகத்தில்
அச்சிட்டவர் முத்து. மெய்கண்டதேவன்
முகவரி:- ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் - Pin 612504